# நரம்புக் கருவிகள்




முனைவர் செ. சுப்புலட்சுமி மோகன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# நரம்புக் கருவிகள்

முனைவர் செ. சுப்புலட்சுமி மோகன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

இராமலிங்கம்–அபிராமி அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் : ஏ.ஆர்.ஏ. சிவகுமாரன், சிங்கப்பூர்)
வரிசை எண் : 6

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Narampuk karuvikaḷ |
| Author | : | Dr. S. Subbulakshmi Mohan<br>Professor, Dept. of Music<br>Tamil Nadu Music College<br>Chennai - 600 059 |
| General editor | : | Dr. P. Selvakumar<br>Associate Professor<br>Faculty of Language and Linguistics<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 737 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of publication | : | 2012 |
| Paper used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Points |
| No. of pages | : | x + 150 |
| No. of copies | : | 1200 |
| Price | : | Rs. 70/- (Rupees Seventy Only) |
| Printed by | : | Lakshmi Agencies<br>23/11, Perumal Mudali Street<br>Royapettah, Chennai - 600 014 |
| Subject | : | Stringed Instruments |

முனைவர் கோ. விசயராகவன்
எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# அணிந்துரை

அறிவின் பரிணாம வளர்ச்சியில் மனிதன் தன்னை மனதளவிலும் உடலளவிலும் தூய்மைப்படுத்திக் கொள்ளும் திறத்தைப் பெற்றான். உடல் உழைப்பினால் உணவு தேடி அதை உண்டு களிப்புற்ற மனிதன் இளைப்பாறி இனிமை காண்பதில் எண்ணத்தைச் செலவழிக்கலாயினான். இளைப்பாறிய நிலையில் காற்றின் செயல்பாட்டைக் கவனிக்கத் தொடங்கினான். காற்று தடைப்படும்போது எழுகின்ற ஓசையைக் கேட்டு இன்புற்றான். தடுப்புகளில் நுழைந்தும், நெளிந்தும், தட்டுப்பட்டும் வெளியேறுகிற காற்று ஒலி எழுப்பிச் செவிக்கு விருந்து படைப்பதைத் தொடர்ந்து உன்னித்து நோக்கினான். மனதிற்கும் செவிக்கும் இன்பம் தரும் இசை என்றும் உன்னதப் படைப்பை வெவ்வேறு கோணங்களில் வளர்க்க முனைந்தான்.

''ஆடு அமைக்குயின்ற அவிர்துளை மருங்கின்'' என்ற அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுவதைப் போல இயற்கையோடு இணைந்து இசையொலிகளைக் கண்டறிந்து, அவற்றைப் பயன்படுத்தத் தொடங்கினான். பல்வேறு கருவிகளைச் செய்து பயன்பெற விளைந்தான். அதனால் சங்கு, குழல், கொம்பு, தூம்பு, பந்தல், வருவாய், பட்டை, போர்வை, ஆணி, உந்தி, மருப்பு, திவவு, நரம்பு, கவைக்கடை, கண்கூட்டு, மாடகம் போன்ற இசைக்கருவிகளைச் சங்க காலத் தமிழன் உருவாக்கியவற்றை நாம் கிடைக்கப் பெற்றுள்ளோம். அகலவன், அகவுநர், அகவர், ஆடுநர், இயவர், கண்ணுளர், கலப்பையர், கிணைவன், கூத்தர், கோடியர், துடியன், பரிசிலர், பறையன், பாடுநர், பாணன், பொருநர், முழவன், வயிரியர், சூதர், மாகதர், வேதாளிகர், ஆடுமகள், கிணைமகள், பாடினி, பாண்மகள், பாடுமகள், விறலி, ஆயர், எயினர், கடம்பர், கள்ளர், கானவர், விளைஞர், அகவன் மகள், குறமகள், குறுமகளிர், கொடிச்சி போன்ற சங்க காலம் குறிப்பிடும் இசைக் கலைஞர்களும் நமக்குக் கிடைத்தனர்.

இசைமரபுகளையும், இசைக் கருவிகளின் வளமைகளையும் எடுத்துச் சொன்ன நூல்கள் பலவாயினும் அவற்றின் தொன்மத்தைத்

தொட்டு மீட்டெடுத்துக் கொண்டு வரும் நூல்கள் தற்காலத்தில் அரிது. ஆனால் 'நரம்புக் கருவிகள்' என்ற பொருண்மையில் அமைந்த இந்நூலில் தோற்றம் முதல் வகை, வளர்ச்சிநிலை மற்றும் சிற்பங்களிலும், இலக்கியங்களிலும் நரம்புக்கருவிகளின் பதிவுகளைப் புதிய பார்வையில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. 'தமிழ் இசைக் கருவூலம்' என்ற நூலின் ஆசிரியரான முனைவர் செ. சுப்புலட்சுமி மோகன் அதே வரிசையில் நின்று 'நரம்புக் கருவிகள்' என்று தனித்துவத்தோடு எழுதப்பட்டிருக்கும் இந்நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வழி வெளிவருவது மிகச் சிறப்பு. இராமலிங்கம் அபிராமி என்ற பெயரில் நிறுவிய அறக்கட்டளையின் வழி நூலின் பொருண்மையை உரையாக்கி அதற்குச் சான்றாக நல்லதொரு பொழிவினை வழங்கியமைக்கு நூலாசிரியரைப் பாராட்டுகிறேன்.

இவ்வறக்கட்டளைப் பொறுப்பாளராக இருந்து தக்கதொரு சிறந்த நூல் வெளிவரத் துணைநின்ற பேராசிரியர் முனைவர் பெ.செல்வக்குமார் அவர்களுக்குப் பாராட்டுகள்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் நிறுவனத் தலைவர் **மாண்புமிகு பள்ளிக்கல்வி, தொல்லியல், விளையாட்டு(ம)இளைஞர் நலம், தமிழ் ஆட்சிமொழி, சட்ட அமைச்சர் திரு. என்.ஆர். சிவபதி** அவர்களுக்கு எமது இதயங்கனிந்த நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழக அரசின் **தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித் துறைச் செயலாளர் முனைவர் மூ.இராசாராம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் எமது மனமுவந்த நன்றி.

இவ்வறக்கட்டளையின் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்களுக்கும், எம் நன்றிகள். இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த லட்சுமி ஏஜென்ஸீஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# ஆசிரியர் குறிப்பு



முனைவர் திருமதி செ. சுப்புலட்சுமி மோகன் அவர்கள், மதுரை அரசு இசைக் கல்லூரி முதல்வர் பொறுப்பும், இசைத்துறைத் தலைவராகவும் பணிபுரிந்து வருகிறார். இவர் கர்நாடக இசையைச் சங்கீத பூஷணம் கடலூர் திரு. எம். சுப்ரமணியம் அவர்களிடமும், சங்கீத வித்வத் சபையில் சங்கீத கலாநிதி திரு.பி. ராஜம் ஐயர் அவர்களிடமும், தமிழிசையை இசைப் பேரறிஞர் தருமபுரம் திரு.பி. சுவாமிநாதன் அவர்களிடமும் பயின்றவர். சென்னைப் பல்கலைக்கழக இசைத்துறையில் ''முத்துத் தாண்டவர் பாடல்கள்'' என்ற தலைப்பில் முனைவர் பட்டம் பெற்றவர். மனித வளர்ச்சி மேம்பாட்டுத் துறையில் (Ministry of Human Resource Development, Govt. of India) ''ஞானசம்பந்தர் தேவாரம்-பண்வழி'' (Gnanasambandar Thevaram with respect to Pann) என்ற தலைப்பில் ஆய்வு செய்துள்ளவர். சென்னைப் பல்கலைக் கழக இசைத்துறையின் செயற்குழு உறுப்பினர். செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் மூலம் ''சங்க காலம் முதல் இன்று வரை-பறை-இசைக்கருவி'' என்ற தலைப்பின் கீழ் ஆய்வு செய்யத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். தமிழ்நாடு அரசு வெளியிட்ட ''தமிழிசை இலக்கணம்'' என்ற பாடப்புத்தகத்தின் நூல் குழு உறுப்பினர். திரு.கே.என். தண்டாயுதபாணி பிள்ளை அவர்களின் ''ஆடல் இசை அமுதம்'' என்னும் ஆடற்கலை நூலையும், ''இந்திய இசைக் கருவூலம்'' என்ற இசை இலக்கண நூலையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். அன்னை தெரசா பல்கலைக்கழகம், பாரதிதாசன் பல்கலைக் கழகம் மற்றும் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம் போன்றவற்றில் ஆய்வு நெறியாளராக உள்ளார். 'திருமுறை இசைத்திலகம்', 'கலைச் சுடர்மணி', 'பண்ணிசைச் செல்வி', 'பண்ணிசைத் தென்றல்' போன்ற பல பட்டங்கள் பெற்றுள்ளார்.

# நன்றியுரை

மிகத் தொன்மை வாய்ந்தது நம் தமிழரின் இசை மரபு. இசையை வெளிப்படுத்த நம் தமிழர் பயன்படுத்தியது குரலையும் இசைக் கருவியையுமே. குரலிசைக்கு மேலும் இனிமையூட்ட, மனதைக் கவரச் செய்ய பலவகை இசைக் கருவிகள் பயன்படுத்தப்பட்டன. இந்த இசைக் கருவிகளில் நரம்புக் கருவிகள் தனித்தன்மை வாய்ந்ததாக உள்ளன. துன்பம் நேர்கையில் யாழ் எடுத்து நீ இன்பம் சேர்க்க மாட்டாயா என்று பாரதிதாசன் துன்பம் நீக்கி இன்பம் சேர்க்க விரும்பிக் கேட்ட கருவியாகிய யாழ் ஒரு நரம்புக் கருவியே. தம்மக்கள் மழலைச் சொல்லின் இனிமையை நிகர்த்த நரம்புக் கருவிகள் பற்றிய ஒரு நூல் வெளியிட வாய்ப்பு அளித்துள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

செ. சுப்புலட்சுமி மோகன்

# பொருளடக்கம்

# 1. நரம்புக் கருவிகள் - ஓர் அறிமுகம்

ஒரு நாகரிகத்தின் தன்மையினை அம்மக்கள் போற்றி வளர்த்த கலைகளைக் கொண்டு அளவிடும்போது அந்நாகரிகம் பண்பாட்டு வரலாற்றில் மிகச் சிறப்பான இடத்தைப் பெறும். மனிதனது உள்ளத்தைத் தன்வயமாக்கி இயக்கும் ஆற்றல் கலைகளுக்கு உண்டு. இக்கலைகளுள் இசைக்கலை ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர் வரை அனைத்தையும் தன்வயப்படுத்தும் ஆற்றல் பெற்றது. இசை கேட்டு மயங்காத உயிரினம் இல்லை. மகுடியின் இசைகேட்டு மயங்கும் பாம்பு முதல் இசை கேட்டுச் செழித்து வளரும் தாவரங்கள் வரையிலான செயல்கொண்டு உணரலாம். தமிழர்கள் ஒலி உணர்வு மிக்கவர்களாக விளங்கினர் என்பதை அவர்கள் படைத்தளித்துச் சென்றுள்ள இலக்கண, இலக்கிய நூல்களால் அறியமுடிகிறது. பண் என்ற இசையை வெளிப்படுத்தத் தமிழர் பயன்படுத்தியது குரலையும் இசைக் கருவியையுமே. வாய்ப்பாட்டிற்கு இனிமையூட்டவும், இசைக்குச் (பண்) செறிவூட்டவும் பலவகை இசைக்கருவிகள் பயன்படுத்தப் பட்டன. அவை நரம்புக் கருவிகள், தோல்கருவிகள், துளைக் கருவிகள், கஞ்சக் கருவிகள் என்பன. இந்தியாவில் ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட இசைக் கருவிகள் இருப்பதாகவும், அவற்றில் தமிழ் நாட்டிற்குரியவை ஏறத்தாழ இருநூற்றைம்பது இசைக் கருவிகள் எனத் தெரியவருகிறது. தமிழரின் இசை மரபு மிகத் தொன்மை வாய்ந்தது. பரந்த பரம்பரை கொண்டது.

சங்க இலக்கியங்கள் வழி குறிஞ்சி நிலமக்கள் குறிஞ்சிப் பண்ணைப் பாடி மகிழ்ந்ததோடு அதற்கு மேலும் இனிமை சேர்க்கக் குறிஞ்சி யாழையும், தொண்டகப் பறையையும் வாசித்துள்ளனர். இவ்வாறு ஒவ்வொரு நிலமக்களும் பறை, யாழ் கொண்டுள்ள செய்தியைக் காணும்போது சங்கத் தமிழனின் இசை அறிவு நமக்குப் புலப்படும். இசைக்கருவிகளில்

நரம்புக் கருவியாகிய யாழும் துளைக்கருவியாகிய குழலும் தனித்து இருந்து இசையை அளிக்கும் தனிப்பெருமை கொண்டவை.

குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர் - திருக்குறள்

சங்க நூல்கள் நரம்புக் கருவியின் பெருமையைப் பலவாறு எடுத்து இயம்புகின்றன. தினைக் கதிரை உண்ண வந்த யானை கூடத் தினைப்புனம் காக்கும் பெண்ணின் குறிஞ்சிப் பண்ணை யாழில் கேட்டு மயங்கியது என்றும், பெருங்கதையில் உதயணன் மிகப்பெரிய மதங்கொண்ட யானையை யாழ் கொண்டு அடக்கினான் என்னும் செய்திகள் நரம்பிசையின் பெருமையை நமக்குக் காட்டுகின்றன. ஆலவாய்ச் சொக்கநாதரிடமிருந்து பொற்பலகையைப் பெற்றுத் தந்தது பாணபத்திரரின் யாழிசை என்றால் நரம்புக் கருவியின் பெருமை நமக்கு விளங்கும்.

இசையைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்த பழந்தமிழ் மக்கள் குழுவினராகப் பாணர், விறலியர், கூத்தர், பொருநர், கோடியர், வயிரியர் ஆகியோரைக் காண்கிறோம். இவர்களில் பாணர் பாடி யாழ் வாசிப்பதையே தொழிலாகக் கொண்டவர்கள். அவர்கள் கையிலிருந்த யாழ் ஒரு சிறந்த நரம்புக்கருவி. சிறந்த இசை வல்லவனான இராவணன் தன் கொடியில் வீணையை அடையாளச் சின்னமாகக் கொண்டுள்ளான். குப்த மன்னர்கள் காலத்தில் சமுத்திர குப்தர் என்ற மன்னன் காலத்தில் வெளியிட்டுள்ள நாணயத்தில் யாழ் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது.

**சமுத்திர குப்தர் கால நாணயம் - யாழுடன்**



யாழ்ப்பாணர் என்று ஓர் இனமே, சமுதாயமே இருந்துள்ளது. தமிழிசை வளர்ச்சிக்கு அவர்களும், அவர்கள் கையில் இருந்த யாழும், அதன் இன்னொலியும் முதன்மைக் காரணம் எனலாம். இவர்களில் பாணர் மரபில் பிற்காலத்தில் இசை வளர்த்தவர்களாக, திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருப்பாணாழ்வார், பாணபத்திரர், மதங்க சூளாமணியார் முதலியோர் யாழ் இசை வல்லவர்கள். இவர்கள் நரம்பிசைக் கருவி வல்லுநர்களின் முன்னோடிகளாய் இருந்துள்ளனர்.

இத்தகு கருவியின் தோற்றம், அதன் வகைகள், அமைப்பு, அதன் பயன்பாடு, அது நாடு முழுதும் காணப்பட்ட விதம் இந்நூலில் கூறப்பட்டுள்ளது. சிற்பங்கள் வழியாகவும், இலக்கியங்களின் வழியும் இதன் அமைப்பும், சிறப்பும் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

## 2. நரம்புக் கருவிகளின் தோற்றம்

அக்காலத்தில் மனிதன் தன் வாழ்நாளில் பலமணி நேரங்களைத் தனக்கு வேண்டிய பொருள்களைப் பெற, முக்கியமாக உணவுப் பொருள்களைப் பெற வேட்டையாடியே கழித்துள்ளான். வெகுதூரத்தில் உள்ளவற்றை அவன் வேட்டையாடப் பயன்படுத்திய முக்கியக் கருவி வில் ஆகும். இந்த வில்லில் நாண் ஏற்றி அம்பு விடும்போது அது ஏற்படுத்திய ஒலி அவனை வில்யாழ் என்ற கருவியை உருவாக்கச் செய்தது. எனவே மனிதன் தன் பயன்பாட்டுப் பொருளிலிருந்து தன் நுண் செவிப்புலன் உணர்வின் காரணமாகக் கண்டறிந்து உருவாக்கிய ஓர் இசைக்கருவி - 'நரம்புக்கருவி' எனலாம். அவ்வாறு உருவாகிய வில்யாழ் பின்னால் பல மாறுதல்கள் பெற்றுப் பல வகைக் கருவிகளாக வளர்ந்துள்ளது.

**வில்யாழ்**



## வில் யாழிலிருந்து பிற கருவிகள்

### யாழின் பரிணாம வளர்ச்சி (வில் யாழ் முதல் வீணை வரை)



### சிறுவர்கள் விளையாட்டுப் பொருளிலிருந்து நரம்புக் கருவியின் தோற்றம்

*1.* இது சிறுவர்கள் விளையாடுவதற்கு, விளையாட்டாக உருவாக்கிய கருவி என்றும் கூறலாம். நாம் அன்றாடம் வீட்டில் பயன்படுத்தும் பொருள்களிலிருந்து உருவாக்கியது என்று கூறலாம். புலால் உணவுக்குப் பயன்படுத்தும் விலங்குகளின் குடலைச் சிறுவர்கள் எடுத்துக்கொண்டு ஒரு புறத்தை வாயில் பல்லால் கடித்துக் கொண்டும், மறுபுறத்தைக் கையால் பிடித்துக் கொண்டும் அவற்றை இழுத்து மீட்டி, அதன் ஒலியை இரசிப்பர். இது ஒரு நேரத்தில் ஓர் ஒலி உண்டாக்கும். ‘ஓர்ஒலி இசைக்கருவி’ எனக் கொண்டால் துந்தினா போன்ற சுருதிக் கருவிகள் ஏற்படக் காரணமாக இருந்துள்ளது என்றும் கருத வாய்ப்புண்டு.



2. சிறுவர்கள் மீன் பிடிக்கப் பயன்படுத்தும் தூண்டில் ஒரு நரம்புக்கருவியாகத் தோன்றியிருக்க வாய்ப்புள்ளது. தூண்டில் என்பது ஒரு நீளக் குச்சியும் அதன் ஒரு முனையில் கட்டப்பட்ட கயிறும் கொண்டது. நீரில் அக்கயிறு ஏற்படுத்தும் ஒலியும், மீன் அகப்பட்டவுடன் தூண்டியைத் தூக்க ஏற்படும் ஒலியும் தூண்டில் பயன்படுத்தாதபோது கயிற்றின் மற்றொரு முனை குச்சியின் மற்றொரு முனையுடன்கட்டி நரம்புக்கருவியை உருவாக்கி இருக்கலாம்.

## மூங்கிலிலிருந்து நரம்புக் கருவிகளின் தோற்றம்

வண்டுகள் துளையிட்ட மூங்கிலுக்குள் காற்று சென்று காற்றுக் கருவியை உருவாக்கியதுபோல் அந்த மூங்கிலின் மேல் உள்ள மேல் தோலை இழையாக எடுத்து அதை மீட்டி இசை ஒலி எழுப்பி உள்ளார்கள். இக்கருவி இன்றும் ஆந்திர மாநிலப் பழங்குடி மக்களிடம் காணப்படுகிறது. அது 'ரோன்சா கோண்டம்' என்று அழைக்கப்படுகிறது. இதேபோல் அசாம் மாநிலப் பழங்குடியினரும் 'ஜின்டாங்' என்ற கருவியைப் பயன்படுத்துகின்றனர். பெயர்கள்தாம் மாறி உள்ளனவே தவிர இவை இரண்டும் மூங்கிலால் செய்யப்பட்டவை. ஒரு நீண்ட மூங்கிலின் வெளித்தோல் போன்ற மேற்பகுதியை நீளவாட்டில் இழைகளாக இணைக்கப்பட்டு அவை நரம்பு போலப் பயன்படுத்தப்படுகின்றன. இவ் இழைகளின் மேல் ஒரு குச்சியால் அடித்து ஒலி எழுப்பப்படுகிறது. இந்த முறையில் தான் இன்று தமிழ்நாட்டில் கெத்து என்ற இசைக் கருவி வாசிக்கப்படுகிறது. காஷ்மீர மாநிலச் சந்தூர் என்ற இசைக் கருவியும் குச்சிகளை வைத்துத் தட்டியே வாசிக்கப்படுகிறது. இவ்வாறு மூங்கிலின் இழைகளே நரம்பாகக் கொண்டு பழங்குடி மக்களால் உருவாக்கப்பட்ட நரம்புக்கருவிகள் பல மாற்றங்கள் பெற்று இன்று சிறந்த இசைக் கருவிகளாக உள்ளன என்றும் கூறலாம்.

இந்த மூங்கிலின் இருபுறங்களிலும் ஒரு குடல் நரம்பை இழுத்துக்கட்டி அதை மீட்டி ஒலி எழுப்பி உள்ளனர். இது பிற்காலச் சுருதிக் கருவிகளான துந்தினா போன்ற கருவிகளுக்கு முன்னோடி எனலாம்.



மூங்கில் - நரம்புக் கருவி









சுருதிக் கருவிகள்

## ஜின்டாங் - நரம்புக்கருவி

பழமையான
மூங்கிலின்
மேல்தோலை
இழைகளாக்கி
வாசிக்கப்பட்ட கருவி



The [illegible]. Assam.

## டென்டங் - நரம்புக்கருவி

மூங்கிலைப் பயன்
படுத்திய மற்றொரு
நரம்புக் கருவி



The [illegible]. Assam.

நரம்புக் கருவிகளைப் பொறுத்தவரை யாழ் என்ற கருவியே உலகில் முதன் முதலில் தோன்றிய கருவி. இக்கருவி பற்றிச் சங்க நூல்களில் கூறப்படுகிறது. இந்த யாழ், சங்க காலத்தில் பாணர், பாணினி கைவழியாக இருந்துள்ளது. அவர்களின், வாழ்க்கையோடு இணைந்த கருவியாக, அவர்களின் உயிர் மூச்சாக, வாழ்வின் ஆதாரமாக இருந்துள்ளது என்பது சங்க நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு வழி அறிகிறோம். தமிழரின் இசை ஞானத்தை, இசை நுண்ணுணர்வை வெளிப்படுத்தும் கருவியாக இக்கருவி உள்ளது என்பதைச் சங்கப் பாடல் வழி அறிகிறோம். அக்கருவியை அவர்கள் பயன்படுத்திய விதமும், அதன் வகைகளும், பலவகை யாழ்களின் பெயர்களும் இசை உலகத்திற்கே வியப்பைத் தரும் வகையில் உள்ளன. அந்த யாழ் அழிந்தபின் மீண்டும் நரம்புக் கருவிகளில் மறுமலர்ச்சி தோன்றியுள்ளது எனலாம். இதில் ''ஒரு நரம்பு'' கொண்ட கருவியிலிருந்து பல நரம்புகள் கொண்ட கருவிகளும், மெட்டு இல்லாமல் பின் மெட்டுக்களுடன் என்று படிப்படியாக மாற்றம் பெற்றுத் தற்போது உள்ள ஒரு சிறந்த கருவியாக மாற்றம் பெற்றுள்ளது நமக்கு வியப்பைத் தருகிறது. ஏனென்றால் மிகச் சிறந்த இசை வித்தகனான சங்கத் தமிழன் எங்கே போனான்? முழுமையாகப் பண் வாசித்த, அரங்கிசையில் வாசிக்கும் தன்மை உள்ள ஒரு கருவி எங்கே போயிற்று? அதை வாசித்த இனமும், கருவியும் அழியக் காரணமென்ன? மறுபடி ஏன் 'ஒரு நரம்பு' கொண்ட கருவி முதல் (சிறிய கருவி) தற்போதைய கருவி வரை தோன்றக் காரணம் என்ன? என்ற கேள்வி நம் மனதிற்கு வருத்தத்தைத் தருகிறது. தற்போது பயன்படுத்தப்படும் வீணை (முழுமையான கருவி) கி.பி.17ஆம் நூற்றாண்டில் தான் முழுமையான வடிவம் பெற்றது என்று கூறப்பட்டால் நம் முன்னோர்களான சங்கத் தமிழ்ப் பாணர்கள் பெருமையைச் சாதாரணமாக நினைக்க முடியாது.

உலகத்தில் மிகப் பெரிய டயனோசர் என்ற விலங்கு எவ்வாறு இனத்துடன் மறைந்தது என்ற கேள்வியே யாழ்

மறைந்ததற்கும் பதிலாக அமையும். உருவ அமைப்பிலும் வீரத்திலும் மிகப் பெரிய விலங்கான அந்த விலங்கு ஏன் மறைந்தது. அதன் இனமே ஏன் மறைந்தது. ஏன் அதன் சந்ததியில் ஒன்று கூட இல்லை என்ற கேள்விகளே யாழுக்கும் பதில் கொடுக்கும். தாம் இருந்தவரை தன்னிகரில்லாது இருந்து (யாழ், மிருகம்) பின் இனத்துடன் அழிந்தவை இவ்விரண்டுமே. இதற்குக் காலச் சூழ்நிலையே காரணம் எனலாம். மறைந்தவை இரண்டிற்கும் இணை அவையே.

# 3. நரம்புக் கருவிகள் பற்றிப் படத்துடன் விளக்கம்

இப்பகுதியில் நரம்புக் கருவிகள், யாழிலிருந்து தற்போது உள்ள இந்திய நரம்புக் கருவிகள் வரை, குறிப்பாகத் தென் இந்திய நரம்புக் கருவிகள் படத்துடன் விளக்கப்பட்டுள்ளன. அவை,

1. வில்யாழ்
2. பேரியாழ்
3. மகர யாழ்
4. சீறி யாழ்
5. மருத்துவ யாழ்
6. கீசக யாழ்
7. தும்புரு யாழ்
8. சகோட யாழ்
9. வில்லடி வாத்தியம்
10. துந்தினா
11. கின்னரி
12. விபஞ்சி வீணை
13. கச்சபி வீணை
14. பரிவாதினி
15. இராவண வீணை
16. விசித்திர வீணை
17. நிசங்க வீணை
18. பினாகி வீணை
19. ருத்திர வீணை
20. தண்டிப் பானை
21. வீணைக் குஞ்சு
22. நந்துனி
23. கூர்ம வீணை
24. புள்ளுவன் குடம்
25. சுரமண்டலம்
26. சாரங்கி
27. சரிந்தா
28. தம்புரா
29. வீணை
30. கோட்டு வாத்தியம்
31. கெத்து இசைக்கருவி
32. பால சரஸ்வதி
33. பிரதர்ஷண வீணை

## 1. வில்யாழ்

ஆதிகாலத்தில் வேடன் வேட்டையாட வில்லைப் பயன்படுத்தினான். நாணிலிருந்து எழுந்த இனிய ஓசையை அறிந்த வேடர்கள் பல ஆண்டுகளாக ஆராய்ந்து வில்யாழை அமைத்தனர். வில்யாழின் நீளத்தைக் கூட்டியும், குறைத்தும், இறுதியில் தம் முயற்சியால் வெற்றி கண்டனர். பின் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து வில் யாழ்களையும் இணைத்து ஒவ்வொரு வில் யாழின் நரம்பைத் தளர்த்தியும், முறுக்கியும், பல்வேறு மெலிவும் வலிவும் உள்ள ஒலிகளைக் கண்டனர். இறுதியாக 7 வில்யாழ்களை இணைத்து 7 நரம்புகள் கொண்ட ஒரு முழுமையான வில்யாழை அமைத்தனர். வில்யாழ், வில்லாண்மை பெற்ற வேடர்களாகிய குறிஞ்சி நிலமக்கள் கண்ட யாழே ஆகும். பெரும்பாணாற்றுப் படையில் ஆனிறை மேய்க்கும் ஆயன் குமிழ மரக் கொம்புகளை வில்லாக வளைத்து மரல் நாரினை நரம்பாகக் கட்டி வில்யாழில் குறிஞ்சிப் பண்ணை இசைத்தான் என்கிறது. கடைச் சங்க காலத்துப் புலவராகிய கடியலூர் உருத்திரங்கண்ணனார் தொண்டைமான் இளந்திரையனைப் பாடிய பெரும்பாணாற்றுப் படையில் உள்ள பாடல் ஒன்று வில்யாழ் பற்றிக் கூறுகிறது.

. . . . . இடையன்
கன்றமர் நிரையோடு கானத் தல்கி
அந்நு ணவிர்புகை கமழக் கைம்முயன்று
ஞெலிகோல் கொண்ட பெருவிறன் ஞெகிழிச்
செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்
இன்றீம் பாலை முனையின் குமிழின்
புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யாழ் இசைக்கும் விரலெறி குறிஞ்சிப்
பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்
புல்லார் வியன் புலம் போகி. . . . .

- பெரும்பாணாற்றுப் படை

இப்பாடலின்படி, குமிழ மரக்கொம்புகளை வில்லாக வளைத்து, மரல் நாரிலே திரித்த கயிறுகளை நாணாகக் கட்டி, நரம்புகளைத் தெறித்து, இசையொப்புமையினை ஆராய்ந்து

குறிஞ்சிப் பண்ணை வாசிக்கிறான். இடையன் இசைத்த குறிஞ்சியிசையினைக் கேட்ட வண்டுகள் இவ்விசை நமது சுற்றத்தின் ஓசையெனக் கருதிச் செவி கொடுத்துக் கேட்டன என்று கூறுகிறார்.

வண்டின் இமிர்தல் சேய்மையில் உள்ளோர்க்குக் கேட்காது. அண்மையில் உள்ளோர்க்கு மட்டும் கேட்பது போல் வில்யாழின் இசையும் அண்மையில் உள்ளோருக்கு மட்டுமே கேட்கும். இதற்குக் காரணம் உள்ளீடற்ற குமிழங்கொம்பு வில்யாழில் பத்தராகவும், கோடாகவும் உள்ளதால் ஒலி பெருகுவதற்கு இடமில்லாமல் போய்விட்டது.

கேரள நாட்டில் உள்ள சாரணார் என்ற ஒரு வகுப்பினர் ஒரு நரம்பு உள்ள கருவியைப் போன்ற ஒருவகை வில் யாழை இன்றும் பயன்படுத்தி வருகின்றனர். இது கேரள நாட்டுப் பாமர மக்களின் நாட்டுப்புறப் பாடல்களோடு சேர்த்து எண்ணப்படுகிறது. பீகார், நாக்பூர் ஆகிய பகுதிகளிலும் இதுபோன்ற வில்யாழ் பயன்படுத்தப்பட்டு வருகிறது. தாய்லாந்து, லாவோஸ், பிபா போன்ற நாடுகளிலும் வில்யாழ் போன்ற இசைக்கருவிகள் காணப்படுகின்றன.

இந்தியாவில் மலைப் பகுதிகளில் வாழும் மலைச் சாதி மக்கள், வேட்டுவக் குல மக்கள் வில்யாழைப் பயன்படுத்தி வருகின்றனர்.

கேரள மாநிலத்தில் வள்ளுவ நாட்டு வட்டத்தில் உள்ள பெருந்தல் மன்னா என்ற ஊருக்கு அண்மையில் உள்ள காடுகளில் ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டு வாழும் நாடோடிகளான பள்ளுவர் என்ற இனத்தவர் வில்யாழைப் பயன்படுத்தி வருகிறார்கள் (பாணர் கைவழி - வரகுண பாண்டியன் - 1950)

வில்யாழ் மிகத் தொன்மை வாய்ந்த தமிழர் கண்ட இசைக்கருவி. இதுதான் தமிழர் இசைத்த ஆதி நரம்புக் கருவி. இதன் அடிப்படையில் தான் மேல்நாட்டினரின் 'Harp' என்ற இசைக்கருவி அமைந்துள்ளது.



வில்யாழ் (விபுலானந்தர் கண்டது)



(4) வில்யாழ் கி. மு. 8000) (5) [illegible] யாழ் (மூர்த்திகளில் காணப்படுவது)-கி. மு. 4000 (6) [illegible] யாழ் (கி. மு. 4000) (7) எகிப்திய யாழ் (கி. மு. 8000)

**வில் யாழ் வேறு நாடுகளில்**

பேரியாழ்



பேரியாழ் (விபுலானந்தர் கண்டது)

## யாழின் உறுப்புக்கள்



2(c) உந்தி



2(h). யாப்பு



1. பத்தர், கோடு, வறுவாய்



**2(a) போர்வை**

# பெருங்கலம்
## என்னும்
# பேரியாழ்



முகப்புப்பார்வை




பக்கப்பார்வை

## 2. பேரியாழ்

அமராவதி நகரிலுள்ள சிலப்பதிகாரக் காலத்துக் கல் ஓவியம் எழின்மிக்க நரம்புகளுள்ள யாழின் உருவத்தை நமக்குக் காட்டுகிறது. இதன்படி இக்கருவி சிலப்பதிகாரக் காலத்திலும் அதற்கு முன்னும் தமிழ்நாட்டில் வழங்கி வந்துள்ளது என்பது நமக்குத் தெரிகிறது.

முன்னாளில் பாணன் கையிலும் பாடினி கையிலும் இருந்த யாழ்க் கருவி இளங்கோ அடிகள் காலத்தில் இசை ஆசிரியன் கையிலும், நாடக மகள் கையிலும் போய்ச் சேர்ந்துவிட்டது. அதற்கேற்ப அக்கருவி சித்திரப் படத்துப் புகுந்து, செழுங்கோட்டின் மலர்புனைந்து, மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல வனப்பெய்தி விளங்கியது. திருஞானசம்பந்தர் காலத்தில் தெய்வப் பொற்பலகை மீதேறி அன்பர் உள்ளத்தை உருக்கிய அருட்கருவி ஆயிற்று. கொங்குவேளும், திருத்தக்கதேவரும் நூலெழுதிய காலத்தில் அரசிளங்குமரிகள் கையிலேறி அவர் மனம் விரும்பிய காதலரை அவருக்கு அளிக்கும் கருவியாயிற்று.

சரித்திரக் கால எல்லைக்கு எட்டாத காலத்தில் ‘வில்யாழ்’ எனப் பெயர் பெற்றுக் குழவியாக உதித்து, மழலை பேசி, இடையர் இடைச்சியரை மகிழ்வித்துச் ‘சீறியாழ்’ என்னும் பேதைப் பருவச் சிறுமியாகிப் பின் பாணனொடும் பாடினியொடும் நாடெங்கும் திரிந்து ஏழைகளும் இதயம் களிப்புற இன்சொற்கூறிப் பின் ‘பேரியாழ்’ என்னும் பெயரோடு பெதும்பைப் பருவமெய்திப் பெரும் பாணனோடு சென்று குறுநில மன்னரும், முடிமன்னரும் தமிழ்ப் புலவரும் கேட்டு வியப்பெய்தும் வண்ணம் நயம்பட உரை பகர்ந்து பின் மங்கைப் பருவமெய்தி, அப்பருவத்திற்கேற்பப் புதிய ஆடையும், அணிகலனும் பூண்டு, நாடக அரங்கிலே திறமை காட்டி, மடந்தைப் பருவம் எய்தித் திருநீலகண்ட பெரும்பாணரோடும், மதங்கசூளாமணியாரோடும், அம்மையப்பர் உறை திருக்கோயில்கள் பலவற்றை வலம்வந்து தெய்வ இசையாலே அன்பருள்ளத்தை உருக்கி, முத்தமிழ் வித்தகரால் பாராட்டப் பட்டு, அரிவைப் பருவம் எய்தலும், அரசிளங்குமரிகளுக்கு

இன்னுயிர்ப் பாங்கியாகி அவர்க்கேற்ற தலைவரை அவர்பாற் சேர்த்துச் சீருஞ்சிறப்பு மெய்திநின்ற 'யாழ்' என்ற மென்மொழி நங்கை இருந்த இடம் தெரியாமல் மறைந்து போனாள்.

பழமை பொருந்திய இவ்விசைக்கருவி மறைந்ததோடு, அதன் வழி எழுந்த பண்மரபும் மறைந்துபோயிற்று.

பத்துப்பாட்டின் யாழுறுப்பு உணர்த்தும் பகுதிகளின் உதவி கொண்டு, யாழுறுப்புகளின் இயல்புகள் ஆராயப் பட்டுள்ளன. (யாழ் நூல் பக்.39).

## பொருநராற்றுப்படைவழி யாழ் அமைப்பு

*குளப்புவழி யன்ன கவடுபடு பத்தல்*
*விளக்கழல் உருவின் விசியுறு பச்சை*
*எய்யா இளஞ்சூற் செய்யோள் அவ்வயிற்று*
*ஐதுமயிர் ஒழுகிய தோற்றம் போலப்*
*பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை*
*அளைவாழ் அலவன் கண்கண் டன்ன*
*துளைவாய் தூர்ந்த துரப்பமை ஆணி*
*எண்ணாட் திங்கள் வடிவிற் றாகி*
*அண்ணா வில்லா அமைவரு வறுவாய்ப்*
*பாம்பணந் தன்ன ஓங்கிரு மருப்பின்*
*மாயோள் முன்கை ஆய்தொடி கடுக்கும்*
*கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவின்*
*ஆய்திணை அரிசி யவையல் அன்ன*
*வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்*
*கேள்வி போகிய நீள்விசித் தொடை யல்*
*மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன*
*அணங்கு மெய்நின்ற அமைவரு காட்சி*
*ஆறலைக் கள்வர் படையிட அருளின்*
*மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை*

*(பொருநராற்றுப்படை 4-22)*

பத்தலினையும், பொல்லம் பொத்திய பச்சையாகிய போர்வை யினையும், ஆணியினையும், வறுவாயினையும், மருப்பினையும், திவவினையும், நரம்பின் தொடர்ச்சியினையும் உடைய யாழ் என்கிறது பொருநராற்றுப்படை.

பெரும்பாணாற்றுப்படை வழி யாழ் அமைப்பு

அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி
காய்ச்சினந் திருகிய கடுந்திறல் வேனிற்
பாசிலை யொழித்த பராஅரைப் பாதிரி
வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்ததன்
உள்ளகம் புரையும் ஊட்டுறு பச்சைப்
பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக்
கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை
உருக்கி யன்ன பொருத்துறு போர்வைச்
சுனைவறந்தன்ன இருள் தூங்கு வறுவாய்ப்
பிறைபிறந் தன்ன பின்னேந்து கவைக்கடை
நெடும்பணைத் திரள்தோள் மடந்தை முன்கைக்
குறுந்தொடி யேய்க்கும் மெலிந்து வீங்கு திவவின்
மணிவார்ந் தன்ன மாயிரு மருப்பின்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
தொடையமை கேள்வி . . .

(பெரும்பாணாற்றுப்படை - 1-16)

பச்சையாகிய போர்வையினையும், வறுவாயினையும், கவைக் கடையினையும், திவவினையும், மருப்பினையும், நரம்பின் தொடர்ச்சியினையும் உடைய யாழ் என்று பெரும்பாணாற்றுப் படை கூறுகிறது.

சிறுபாணாற்றுப்படை வழி யாழ் அமைப்பு

பைங்க ணூரகம் பாம்பு பிடித் தன்ன
அங்கோட்டுச் செறிந்த அவிழ்ந்து வீங்கு திவவின்
மணிநிரைத் தன்ன வனப்பின் வாயமைத்து
வயிறுசேர் பொழுகிய வகைமை அகளத்துக்
கானக் குமிழின் கனிநிறங் கடுப்பப்
புகழ்வினைப் பொலிந்த பச்சையொடு தேம்பெய்து
அமிழ்து பொதிந் திலிற்றும் அடங்குபுரி நரம்பின்
பாடுதுறை முற்றிய பயன்றெரி கேள்விக்
கூடுகொள் இன்னியம். . . .

(சிறுபாணாற்றுப்படை - 221-229)

பச்சையோடே வாயமைக்கப்பட்டு வனப்பினையும், திவவினையும், அகளத்தினையும், நரம்பினையும் உடைய இன்னியம் என்று சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.

மலைபடுகடாம் வழி யாழின் அமைப்பு

தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவிற்
கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்
குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின்
அரலை தீர உரீஇ வரகின்
குரல்வார்ந் தன்ன நுண்டுளை யிரீஇச்
சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி
இலங்குதுளை செறிய ஆணி முடுக்கிப்
புதுவது புனைந்த வெண்கையாப் பமைத்துப்
புதுவது போர்த்த பொன்போற் பச்சை
வதுவை நாறும் வண்டுகம ழைம்பான்
மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத்து
அடங்குமயிர் ஒழுகிய அவ்வாய் கடுப்ப
அகடுசேர்பு பொருந்தி அளவினிற் றிரியாது
சுவடுபடக் கவைஇய சென்று வாங் குந்தி
நுணங்கரம் நுவறிய நுண்ணீர் மாமைக்
களங்கனி யன்ன கதழ்ந்துகிளர் உருவின்
வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்

(மலைபடுகடாம்-21-37)

திவவினையும், நரம்பினையும், பச்சையினையும், உந்தியினையும், மருப்பினையும் உடைய பேரியாழ் என்று மலைபடுகடாம் கூறுகிறது.

சங்க காலத்திலும் அதற்கு முன்னர்த் தோன்றிய செய்யுட்களிலும் வில்யாழும், சீறியாழும், பேரியாழுமே குறிப்பிடப் பட்டுள்ளன. சகோடயாழும், மகர யாழும், செங்கோட்டியாழும் சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும், பெருங்கதையிலும், சீவக சிந்தாமணியிலும் காணப்படுகின்றன.

நரம்பு பற்றிக் கூறுகையில்

'ஆய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பு'

எனவும்

பொன் வார்ந் தன்ன புரியடங்கு நரம்பு –

எனவும்

'கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்
குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பு'

எனவும் கூறுகிறது.

ஒன்று மிருபதும் ஓரேழ் மேற் பத்துடனே
நின்ற பதினாறேழு நேடுங்காற் – குன்றாத
நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன் முறையே
மேல்வகை நூலோர் விதி

என அரங்கேற்று காதையுள்ளே அடியார்க்கு நல்லார் காட்டும் உரையினால் நரம்புகளின் எண்ணிக்கை உணரப்படுகிறது.

| | | |
|---|---|---|
| பேரியாழ் | - | 21 நரம்புகள் |
| சகோடயாழ் | - | 16 நரம்புகள் |
| மகர யாழ் | - | 19 அல்லது 17 நரம்புகள் |
| சீறியாழ் | - | 9 நரம்புகள் |

'பாணர்கை வழி'
என்ற நூலில் தஞ்சை
ஆபிரகாம்
பண்டதரின் மகன்
ஆ. வரகுணபாண்டியன்
கண்ட
''நாரதப் பேரியாழ்''.



பேரியாழ் (வரகுணபாண்டியன் கண்டது)

## நாரதப் பேரியாழ்

முதல் சங்க காலத்தில் வில் யாழும் பேரியாழும் சீறியாழும் தோன்றிவிட்டன. கடைச் சங்க காலம் வரை வேறு யாழ்ப் பெயர்கள் காணப்படவில்லை. சிலப்பதிகாரம் மணிமேகலை, சீவக சிந்தாமணி, பெருங்கதை முதலிய நூல்களில் சகோட யாழும், மகர யாழும், செங்கோட்டி யாழும் காணப்படுகின்றன. பின் தோன்றிய கல்லாடத்திலே பேரி யாழ், தும்புரு யாழ், கீசக யாழ், மருத்துவ யாழ் போன்ற சில யாழ்களின் பெயர் வகைகள் காணப்படுகின்றன. அதற்குப் பின் எழுந்த சில நாடக நூல்களில் வராளி யாழ், வல்லகி யாழ், முளரி யாழ், மகதி யாழ், பிரகதி யாழ், தீக்குச்சிக் கை யாழ், தும்புரு யாழ், களாவதி யாழ், கச்சபி யாழ், கின்னரி யாழ், இராவணாசுர யாழ் போன்ற பல யாழ்கள் கூறப்பெற்று உள்ளன.

முதல் சங்க காலத்தில் இருந்தது பெருங்கலம் என்னும் பரவை யாழ். அது 1000 நரம்புகளை உடையது. இது முதல் ஊழியில் அழிந்துபட்டது என்று கூறப்படுகிறது. அதன்பின் 1000 நரம்புகளை உடைய நாரதப் பேரியாழ் என்றொரு யாழ் தலைதூக்கியதாகக் கூறப்படுகிறது. கல்லாடர் கல்லாடத்தில்,

*வடமொழி விதித்த விசைநூல் வழக்குட*
*னடுத்கன வெண்ணான் கங்குலி யகத்தினு*
*நாற்பதின் றிரட்டி நாலங் குலியினுங்*
*குறுமையு நெடுமையுங் கோடல் பெற்றதை*
*யாயிரந் தந்திரி நிறை பொது விசித்துக்*
*கோடி முன்றின குறித்துமணி குயிற்றி*
*யிருநிலங் கிடத்தி மனங்கரங் கதுவ*
*வாயிரத் தெட்டி லமைந்தன பிறப்புப்*
*பிறவி பேதத் துறையது போல*
*வாரியப் பதங்கொ ணாரதப் பேரியாழ்*
*நன்னர் கொ ளன்பா னனிமுகம் புலம்ப*

என்கிறார். இதன் பொருள். "வடமொழி நூல்களின் விதிப்படி 32 விரல் அளவு அகலமும் 84 விரல் அளவு நீளமும் உடையதாய்க் குறுகலும் நீட்டலுமான நரம்புகள் 1000 கட்டப்

பெற்றதாய், மூன்று மூலைகளிலும் இரத்தின மணிகள் பொறிக்கப் பெற்றதாய், நிலமீது கிடத்துக் கைவிரல் களாற்றடவி, 1008 வித இசை ஒலிகளைப் பிறப்பிக்கக் கூடியதாய் உள்ள இசைக்கருவியே நாரதப் பேரியாழாகும்.

இக்கருவி பண்டைய பெருங்கலம் போல் 1000 நரம்புகளையுடையதாய் இருந்தாலும் உருவத்திலும் வேறு பட்டதாய்க் கருதப்படுகிறது. வரகுண பாண்டியன் பாணர் கைவழி என்ற நூலில் (பக் 64) கல்லாடச் செய்யுளை ஆதாரமாக வைத்துத் தம் கற்பனையால் ஒரு முக்கோண நாரதப் பேரியாழைக் கொடுத்துள்ளார். இது முக்கோண வடிவமாய் மூன்று மூலைகளை உடையது. இது மந்திர, மத்திய, தாரம் என்னும் மூன்று நிலைகளில் சுரம் படிப்படியாய் மேலே செல்லச் செல்லச் தீவிரமாகிறதென்றும், நரம்புகள் கீழே வரவரக் குறுகிப் போகிறதென்றும் அறியக்கிடக்கின்றது.

## 3. மகரயாழ்

*தீந்கொடைமகரவீணைத்தெள்விளி யெடுப்பித்தேற்றிப்*
*பூந்தொடி யரிவை தன்னிற் புலமிகுத் துடைய நம்பிக்கு*
*ஈந்திடும் இறைவ ராதி மூவகைக் குலத்து ளார்க்கும்*
*வேந்தடு குருதி வேற்கண் விளங்கிழை தாளதயென்றான்*
(சீவக சிந்தாமணி - காந்தருவதத்தை - 108)

*தகரக் குழலான் தன்னொடு மயங்கி*
*மகரயாழின் வான் கோடு தழீஇ*
*வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையின்*
*எட்டி குமர னிருந்தோன்*
(மணிமேகலை - 4 - 55 - 58)

*மகரவீணையின் கிளை நரம்பு வடித்த*
*இளிபுணர் இன்சீ ரெஃகு உளங்கிழிப்ப*
(மணிமேகலை - 19 - 25 - 26)

*யாணர்க் கூட்டத் தியவனக் கைவினை*
*மாணப் புணர்ந்த தோர் மகரவீணை*
(பெருங்கதை - 3.15 - 22 - 23)

மேலே காட்டியுள்ள நூல்கள் எழுந்த காலத்தில் மகரவீணை

என்ற பெயரில் ஓர் இசைக்கருவி இருந்ததாக அறிகிறோம். சங்க காலச் செய்யுட்களில் இக்கருவி குறிக்கப்படவில்லை. மகரவீணை, மகரயாழெனவும் வழங்கப்பட்ட கருவி பேரழகுடையதாய் இருந்ததென்பதும், அரச குமரர், செல்வர் வீட்டிலே மகளிர்களாலே வாசிக்கப்பட்ட தென்பதும் இது 19 நரம்புகள் உடையது என்பதும் நம்மால் அறிய முடிகிறது.

## 4. சீறியாழ், செங்கோட்டியாழ்

"வணர் கோட்டுச் சீறியாழ்" - சிலம்பு - நடுகற்காதை - 31 என நடுகற் காதையினுள்ளும், "செந்திறம் புரிந்த செங்கோட்டி யாழ்" (சிலம்பு - 106) எனப் புறஞ்சேரியிறுத்த காதையின் உள்ளும் கூறியிருத்தலை நோக்குமிடத்து இளங்கோ அடிகள் காலத்தில் இவ்விரண்டும் இரு வேறு கருவிகளாகக் கருத இடமுண்டு. "பாடும் பாணர் - அம்பணவர் - செங்கோட்டியாழ் அம்பணவர் யாழ்" என்பது அரும்பத உரையாசிரியர் கூற்று. மேலே காட்டிய சிறுபாணாற்றுப்படையின் பகுதியிலே சீறியாழுக்குக் கோடும், திவவும், பத்தரும், போர்வையும், நரம்பும் என்னும் ஐந்துறுப்புங் கூறப்பட்டன. புறஞ்சேரியிறுத்த காதையுரையினுள்ளே

> "செங்கோட்டி யாழே செவ்விதிற் றெரியின் அறுவகை யுறுப்பிற் றாகு மென்ப." "அவை தாம் கோடே, திவவே யொற்றே...... தந்திரி கரமே நரம்போ டாறே"

என அடியார்க்கு நல்லாரால் மேற்கோள் காட்டப்பட்டது. இன்றியமையாத உறுப்பாகிய பத்தர் செங்கோட்டியாழிலே 'ஒற்று' 'தந்திரி கரம்' என ஈருறுப்பாக நிற்கின்றது. சீறியாழ் உறுப்புகளுள் ஒன்றாகிய போர்வைத்தோல் செங்கோட்டியாழில் இல்லை. இரண்டிலும் மாடகம் என்னும் முறுக்காணி இல்லை. நரம்புகள் வலித்தலும் மெலித்தலும் திவவினால் செய்யப்பட்டவை.

சீறியாழ் மிகச் சிறியதாகவும், கையாளுவதற்கும், ஊர் ஊராய்க்கொண்டு செல்வதற்கும் எளிதாக இருந்ததாலும், எப்பொழுதும் பாணர்கள் தம் கையில் வைத்துக் கொண்டிருந்த தாலும் இதற்குக் 'கைவழி' என்றோர்பெயரும் இருந்தது. 'கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி'- புறம். 149.



செங்கோட்டி யாழ் (முதல்நிலை)
(வளர்ந்தகோடு நிமிர்க்கப் பெற்றுள்ளது)



செங்கோட்டி யாழ்



சீறியாழ் (விபுலானந்தர் கண்டது)



சாஞ்சி யாழ் (சிற்பம்)



சிற்பசிரி கையில் உள்ள யாழ் (கி. பி. 1000)



மகர யாழ்



மகதியாழ். இது புத்தர் காலத்திற்கு முற்பட்ட யாழ்
(சாதகக் கதைகளில் காணப்படுவது, கி.மு. 1000)

## 5. மருத்துவ யாழ்

மருத்துவ யாழ் திருத்தம் பெற்றது. செவ்விய உருவம் பெற்றது. நாரதப் பேரியாழையும், கீசக யாழையும் விடச் சிறியது. இதனைச் சிறிய யாழ் என்றும் தெய்வ யாழ் என்றும் அழைப்பர். இது நல்ல வட்டமான வடிவுடையதாய் இருக்கும். பத்தர் முயல் தோலினால் மூடப் பெற்றிருக்கும். நடுவே ஒற்றை நரம்பு இடக்கையாற் கட்டி இடப்பக்கம் மார்ச்சனையை 26 விரல் அளவுள்ளதாய்ப் பத்தரின் மேல் வைத்துக் கொண்டு வலக்கையின் மூன்று புற விரல்களாலும், நுனி விரலாலும் வருடி இயக்கப்படும். இதன்கண் தூங்கல் ஓசை, துள்ளல் ஓசை என்னும் இசை விகற்பங்களைத் தழுவி 62 வகை இசை தோன்றும். இது - 80 விரல் நீளம் உள்ளது. இதனைக் கல்லாடனார் தம் கல்லாடத்தில்

*நிறைமதி வட்டத்து முயலுரி விசித்து*
*நாப்ப ணொற்றை நரம்பு கடிப்பமைத்*
*தந்நரம் பிருபத் தாறங் குலிபெற*
*விடக்கரந் துவக்கி யிடக்கீ ழமைத்துப்*
*புறவிரன் மூன்றி னுனிவிர லகத்து*
*மறுபத் திரண்டிசை யனைத்துயிர் வணங்கு*
*மருத்துவப் பெயர்பெறும் வானக் கருவி*
*தூங்கலுந் துள்ளலுந் துலக்கி நின்றிசைப்ப*
*நான்முகன் முதலா மூவரும் போற்ற*
*முனிவரஞ் சலியுடன் முகம் னியம்பத்*
*தேவர்க ளனைவருந் திசைதிசை யிறைஞ்ச*

என்று கூறுகிறார்.

1008 நரம்புகளை உடைய நாரதப் பேரியாழும், 100 நரம்புகள் உள்ள கீசக யாழும் இசைப்பதற்கும் எடுத்துச் செல்வதற்கும் ஏற்றதாய் இல்லாதிருப்பதை எண்ணிப் பிற்காலத்தே சிறிய யாழாக மருத்துவ யாழ் அமைக்கப் பெற்றிருக்கலாம்.

## 6. கீசக யாழ்

பேரியாழுக்குப் பின் எழுந்த சிறிய யாழ். ஆனால் இது பேரியாழின் அடிப்படையில் அமைக்கப் பெற்ற பெரிய யாழாகும். இது 80 விரல் நீளமும், கனமான உடல் அமைப்பும் உடையது. 100 நரம்புகள் பூட்டப் பெற்றது. இதனுடைய பெரிய உடல் அமைப்பே இது கால வெள்ளத்தில் நீந்தி வர முடியாமல் போனதற்குக் காரணம் என்று எண்ணப் படுகிறது. இதனைக் கல்லாடர்

*............ துன்னி நின்றிசைப்ப*
*வெழுவென வுடம்பெற் றெண்பதங் குலியின்*
*றந்திரி நூறு தழங்கிய முகத்த*
*கீசகப் பேரியாழ் கிளையுடன் முரல*

என்று கூறுகிறார்.

## 7. தும்புரு யாழ்

இது சீகச யாழைவிடச் சிறியது. அழகியது. இசைப்பதற்கு ஏற்றது. எடுத்துச் செல்வதற்கு எளிதானது. இது 12 விரல் சுற்றளவு 94 விரல் நீளமும் உடையது. 9 நரம்புகள் பூட்டப் பெற்றது. தோளிலும், காலிலும் தாங்க வைத்து இசைக்கப்படும். இதனை

**முந்நான் கங்குலி முழுவுடற் சுற்று**
**மைம்பதிற் றிரட்டி யாறுடன் கழித்த**
**வங்குலி நெடுமையு மமைத்துட் டூர்ந்தே**
**யொன்பது தந்திரி யுறுத்திநிலை நீக்கி**
**யறுவாய்க் காயிரண் டணைத்துவரை கட்டித்**
**தோள்கால் வதிந்து தொழிற் படத் தோன்றும்**
**தும்புருக் கருவியுந் துன்னி நின் றிசைப்ப**

என்று கல்லாடம் தும்புரு யாழின் அமைப்பை எடுத்துக் காட்டுகிறது. இதற்கு உரையாசிரியர் ஒன்பது நரம்புகள் கட்டப் பட்டிருக்கும் என்றும் அவற்றுள் சுருதி நரம்பு தனித்திருப்ப ஏனைய எட்டு நரம்புகளும் இரண்டிரண்டாக இணைத்துக் கட்டப்பட்டிருக்கும் என்றும் இதனை, இயக்குங்கால் பதுமாசனத்திலிருந்து தொடையிலும், தோளிலும் பொருந்த வைத்து இயக்கப் பெறும் என்று விளக்கம் கொடுத்துள்ளார்.



**எகிப்தில் அந்தகர் யாழ் வாசிக்கும் காட்சி (சிற்பம்)**
**(கி. மு. 1800)**



சகோட யாழ் (விபுலானந்தர் கண்டது)



சந்திரகுப்தர் கையில் உள்ள யாழ்.
(கி.பி.400) பொற்காசில் காணப்படுவது

## 8. சகோட யாழ்

கேள்வி என்பது இக்கருவிக்கு ஒரு பெயர். "ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி" எனவும் "பிழையா மரபின் ஈரேழ் கோவை" எனவும் போற்றப்பட்ட சகோட யாழ் பலவழியிலும் சிறப்புடையது. அரங்கேற்று காதையின் உள்ளும் வேனிற் காதையினுள்ளும் இசைக்கப் படுவது இக்கருவி.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் கையிலிருந்த இத்தெய்வக் கருவி முத்தமிழ் வித்தகராகிய திருஞான சம்பந்தரால் பாராட்டப் பட்டது. இக்கருவியின் படம் அமராவதி ஓவியத்தில் நமக்குக் கிடைத்துள்ளது.

இக்கருவியிலே பத்தர், போர்வைத் தோல், கோடு, முறுக் காணிகள், 14 நரம்புகள், 10 அந்தரக் கோல்கள் போன்றவை காணப்படுகின்றன.

இப்பொழுது எருக்கத்தம் புலியூரில் உள்ள திருக்கோயிலின் திருநீல கண்ட யாழ்ப்பாணரின் திருவுருவத்தில் யாழ் காணப்படுகிறது. இது சகோட யாழ் எனக் கூறப்படுகிறது.

கும்பகோணத்திற்கு அண்மையில் உள்ள தாராசுரம் என்னும் கோயிலில் திருநீலகண்ட யாழ்ப்பாணர் உருவச் சிற்பத்தில் யாழ் உருவம் காணப்படுகிறது.

## கட்டளை யாழ்

விபுலானந்தர் யாழ் நூலில் இசை நரம்பில் எழுகின்ற இசை ஒலியை இசைக்கோல் கொண்டு அளத்தற்குரிய கருவியைக் கட்டளை யாழ் என்று குறிப்பிடுகிறார். (யாழ் நூல் - இசை நரம்பியல் - பக். 59).

அமைப்பு : ஓர் அங்குலக் கனத்தில் 6 அங்குலச் சதுரமான இரண்டு பலகைகள் எடுத்துக் கொள்ள வேண்டும். 3½ அடி நீளம், 6 அங்குலம் அகலம் ½ அங்குலக் கனம் உள்ள 4 பலகைகள் எடுத்துக் கொள்ளவேண்டும். மேற்கூறிய சதுரத் துண்டுகளை இரு தலைகளிலும் வைத்து நான்கு புறமும்

நான்கு நீளப் பலகைகளையும் வைத்து மூடிய பெட்டியுருவாகச் சிறிய ஆணிகளைக் கொண்டு அமைத்துக் கொள்ள வேண்டும். அளவு கோல் ஒன்றைப் பெட்டியின் மேற்புறத்தில் ஒரு பக்கமாக அமைத்துக் கொள்ள வேண்டும். இரண்டு அங்குல நீளமும், ஓர் அங்குலச் சமமுக்கோண முகமுடைய நான்கு மரத் துண்டுகளைச் செம்மையாகச் சீவி எடுத்துக் கொள்ள வேண்டும். இவற்றை மெட்டு என்கிறோம். மெட்டுகளின் முக்கோண முகத்தினை இரண்டு சமக் கூறு செய்யும் வரிகளை முகத்திடையே வரைந்து கொள்ள வேண்டும். அவற்றின் மேல் நிற்பதாக ஒரு தந்தியும், அவற்றுக்கு வெளியே நிற்பதாக ஒரு தந்தியுமாக இரண்டு எஃகுத் தந்திகளை அமைத்துக் கொள்ள வேண்டும். மெட்டுக்களின் அளவு கோலினை அணைத்து நிற்க வேண்டும். தந்திகளை வலித்தல், மெலித்தல் செய்வதற்கு ஆன முறுக்காணிகள் இரண்டினைப் பெட்டியின் ஒரு தலையிலும், அவற்றைத் துவக்குவதற்கு அமைந்த புரியாணிகள் (Screw) இரண்டினை மற்ற தலையிலும் அமைத்து, அவற்றிலே தந்திகளைக் கட்டிக் கொள்ள வேண்டும். இதுவே கட்டளை யாழ் ஆகிறது. 'ஓசை ஒலி யெலாம் ஆனாய் நீயே' என்று திருநாவுக்கரசரும் 'ஏழிசையாய் இசைப் பயனாய்' என்று சுந்தரரும் போற்றும் தெய்வத்தன்மை வாய்ந்த இசையினைத் தந்த யாழ்க் கருவி தெய்வம் போலப் போற்றப்பட்டது.

"இத்திறத்துக் குற்ற நீங்கிய யாழ் கையிற் தொழுது வாங்கி" என்று இளங்கோ அடிகள் மாதவி யாழைத் தொழுது வாங்கினாள் என்று கூறுமிடத்துத் தொழப்படும் உரிமை யாழ்க் கருவிக்கு உண்டு என்பது விளங்கும்.

*மடுத்தவன் புகுவழி மறையே னென்றி யாழொடும்*
*எடுத்துச் சூள் பலவுற்ற பாணன் வந்த தீயான்கொல்*

என்று மருதக்கலியினுள்ளே யாழாகிய தெய்வத்தோடு பல தெய்வங்களையும் கூட்டிச் சூளுற்ற பாணனது செய்தி கூறப்பட்டது. யாழுக்குரிய தெய்வம் 'மாதங்கி' என்று நச்சினார்க்கினியர் சீவக சிந்தாமணி உரையினுள் கூறியுள்ளார்.

## திருமயம் கோயிலில் காணப்படும் யாழ் சிற்பம்



மயில்யாழ் (திருமெய்யம் - சிற்பம்) (கி.பி.700)

## யாழும் இலக்கியமும்

பொருள் வேண்டிப் பிரியக் கருதிய தலைமகனை நோக்கி, தோழி கூற்றாக வரும் பாடல் :

*காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்*
*யாழ்வரைத் தங்கி யாங்குத் தாழ்புரின்*
*தொல்கவின் தொலைதல் அஞ்சியென்*
*சொல்வரைத் தங்கினர் காத லோரே.*

என்னும் பாலைக்கலியினுள்ளே யானை யாழோசையின் எல்லையிலே தங்கும் என்பது குறிப்பிடப்பட்டது.

உதயணன் கோடபதி என்னும் யாழிசையினால் யானையினை வசப்படுத்திய செய்தி பெருங்கதையினுள் கூறப்பட்டது.

*கொண்டுசெல் பாணநின் தண்டுறை யூரனைப்*
*பாடுமனைப் பாடல் கூடாது நீடுநிலைப்*
*புரவியும் பூண்ணிலை முனிகுவ*
*விரகில மொழியல்யாம் வேட்டதில் வழியே*

என்னும் நற்றிணைச் செய்யுள் அடிகளில் குதிரை இசை கேட்பின் முனிவு கொள்ளும் என்னும் உண்மை குறிக்கப்பட்டது.

*முன் நல்யாழ் பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே*

எனக் கன்னலும் அமிழ்தும் போன்ற கார்முகில் வண்ணன் யாழ் நரம்பின் முதிர் சுவையாகி நின்றான் என்கிறது மற்றொரு பாடல்.

*பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழவையும்*
*உள் நின்ற தோர் உரு*

என்று திருஞானசம்பந்தரும் கூறுகிறார்.

## யாழும் பிற நாடுகளும்

நமது நாட்டினைப் போலவே வேறுபல நாடுகளிலும் யாழ் இசைக்கருவி போற்றப்பட்டுள்ளது. பண்டை நாளில் எகிப்து நாட்டிலும், பாரசீகக் கடற்கரையில் அழிந்து போன சுமேரியா நாட்டிலும், சோழர் குடியேறினமையாலே 'சோழதேயம்' என்னும் பெயரினைப் பெற்றுப் பிற்காலத்தில் மொழிச் சிதைவினாலே சால்தெயா (chaldea) என்று வழங்கப்பட்ட தொல்பதியிலும், கிரீட் தீவிலும் அதை அடுத்த யவன புரத்திலும் (கிரீஸ்), இத்தாலி தேசத்திலும், ஸ்பெயின் தேசத்திலும் தமிழர் குலத்தார் வாழ்ந்து நாகரிகம் பரப்பினார்கள் என மேற்றிசை அறிஞர்கள் ஆராய்ச்சியால் கண்டு வெளியிட்டுள்ளனர். இந்நாடுகளில் எல்லாம் யாழும் போற்றப்பட்டுள்ளது. சிந்து நதிக்கரையில் மொகஞ்சதரோ (Mohan-Jo-Daro) என்னும் நிலப்பரப்பிலும் மிதுனராசியானது யாழ் என்னும் பெயரினால் வழங்கப்பட்டு இணை யாழுருவத்தினாலே குறியீடு செய்யப் பட்டதென அறிஞர்கள் கூறுகிறார்கள். (யாழ் நூல், பக். 26)

இலங்கை மன்னனாகிய இராவணன் வாசித்த நரம்புக்கருவி, அவ்வகைக் கருவி பலவற்றாலும் முதன்மை பெற்றதெனக் கூறுவதற்கு இடமுண்டு.

*தலமுத லூழியிற் றானவர் தருக்கறப்*
*புலமக ளாளர் புரிநரம் பாயிரம்*
*வலி பெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ்*

என்று பெருங்கதையினுள் கூறப்பட்ட கருவியினை ஆதியாழ் எனக் கொள்ளும் அறிவுடையோர் தானவர் கையிலிருந்த யாழ் ஆதி யாழுக்குக் காலத்தால் முற்பட்டது என்பதை மறந்து விட்டனர் போலும்.

'சர் வால்டர் ஸ்காட்' என்னும் கவிஞர் தமது தாய் நாட்டிலிருந்து மறைந்து போன யாழ்க்கருவியினை முன்னிலைப்படுத்தி எழுதிய ஒரு பாடல் நமது நாட்டில் மறைந்த யாழ்க்கருவிக்கும் ஏற்புடையது. ஸ்காட் எழுதிய 'நீர் நிலைக் கன்னிகை' (Lady of the lake) என்ற அழகிய பனுவலின் முன்பகுதியில் உள்ள பாடலின் மொழிபெயர்ப்பு.

> வடபுலத்து நல்யாழே! நீரூற்றினுக்கு நிழலளிக்கும் இம் மரக்கிளை மீது நெடிது தங்கினை. இலையொலியும் அருவி நீரொலியும் இசை யியம்ப நின்னரம்புகள் இசையின்றித் துயிலுதல் முறையாகுமா? முன்னாளிலே வீசுகின்ற காற்றிலே இசை அமிழ்தத்தை உதிர்த்தனையே! நின் பாற் பொறாமை யுற்ற பசுங்கொடி படர்ந்து நின் நரம்புகளை ஒவ்வொன்றாகக் கட்டி விட்டமையி னாலே பேசாதிருக்கின்றனையா? வீரர் முகத்திலே புன்னகை தவழவும், அரிவையர் உவகைக் கண்ணீர் விடவும் நினது இனிய குரலினாலே பேசலாகாதா?
>
> நல்யாழே! துயிலெழுவாயாக நின் நரம்புகளில் படருங் கையானது பயிற்சியற்ற கையெனினும் செழிய பழம் பாடல்களின் இன்னொலிகளை ஓரளவிற்காவது இசைத்தல் ஆகாதா? நின் இசைக்கு உருகி ஒரு இதயமாவது துடிப்புறு மெனின் நின் செயல் வீண் செயல் ஆகாதல்லவா? நீ இன்னும் வாய் திறவாதிருத்தல் தகுதி அன்று. சித்தத்தைக் கவரும் வனமோகினியே! எழுந்திரு இன்னும் ஒருமுறை எழுந்திரு.

வடபுலத்து நல்யாழே! என்று கூறாமல் தென் புலத்து நல்யாழே என இருப்பின் தமிழ் நாட்டுப் பாணர் இசைத்த யாழுக்கு இப்பாடல் ஏற்புடையதாகும்.



பர்மாவிலுள்ள பௌத்தக் கோயிலில்
கண்டெடுக்கப்பெற்ற யாழ் (சவுன் கி.மு. 200)

இது இந்தியாவிலிருந்து பௌத்த சமயத் துறவிகளால் பர்மாவிற்குக் கொண்டு போகப்பட்ட ஒரு யாழின் உருவம். இதைப் பர்மியர்கள் சவுன் என்று அழைக்கிறார்கள். இது கி.மு.200 இல் செய்யப்பட்டது. இந்த யாழின் படிவம் ஒன்று சென்னைத் தொல்பொருள் காட்சி சாலையில் இருக்கிறது. இது மரத்தால் செய்யப்பட்டு அடிப்பகுதி தோலினாலும் மேல்பாகம் உலோகத்தகட்டாலும் செய்யப்பட்டுப் பல வித மணிகள் பதிக்கப் பெற்றுள்ளது

## சுமேரிய யாழ்

இது ஒரு சுமேரிய யாழ். இந்த யாழ் சல்தேயா (சால்டியா) நாட்டின் தலைநகரில் அகழ்ந்து எடுக்கப்பெற்றது. இது கி.மு. 6000 ஆண்டுகளுக்கு முன்னர் உள்ள யாழ் எனக் கூறப்படுகிறது. இதன் ஒலிபெருக்கி மரத்தால் ஆனது. இதன்மீது

உள்ள காளை உருவம் பொன்னால் செய்யப் பெற்றது. இதில் 7 நரம்புகள் உள்ளன. இன்று இந்த யாழ் ஈராக் தொல் பொருள் காட்சி சாலையில் உள்ளது.



**சுமேரிய யாழ் இது (சால்டியா நாட்டில், ஊர் என்னும் நகரில் ஓர் அரசியின் கல்லறையில் கண்டெடுக்கப் பெற்றது. (கி.மு.2600)**



**வில் யாழ் (கி.மு. 4000) எகிப்திய சிற்பம்**

**எகிப்திய எழிலரசிகள் கையில் ஏந்திய வில்யாழ் (Harp)**



VI. அமராவதி, கோலி என்னும் இடங்களில் கண்டெடுக்கப்பட்டு, சென்னை காட்சி சாலையில் வைக்கப்பட்டிருக்கும் பாடினி உருவங்கள்



கிரேக்கர்களின் நரம்புக் கருவி (Lyre) இது தமிழக யாழின் இனத்தைச் சேர்ந்தது



எகிப்திய யாழ் (கி.மு. 1800)
(இது தமிழக யாழை யொத்தது)

**யாழ் வகைகள்**

24 வகையான யாழ்கள் கூறப்படுகின்றன.

1. இராவணாசுர யாழ்
2. கச்சபி யாழ்
3. களாவதி யாழ்
4. கின்னரி யாழ்
5. கீசக யாழ்
6. சகோட யாழ் (14 - 16 நரம்புகள்)
7. சீறி யாழ் (9 நரம்புகள்)
8. செங்கோட்டி யாழ் (7 நரம்புகள்)
9. தீக்குச்சி யாழ்

10. தும்புரு யாழ்
11. நாரத யாழ்
12. பிரகதி யாழ்
13. பேரி யாழ் (21 நரம்புகள்)
14. மகதி யாழ்
    பெருங்கலம் (21 நரம்புகள்)
15. மகர யாழ் - (17 - 19 நரம்புகள்)
16. மருத்துவ யாழ்
17. முளரி யாழ், முண்டக யாழ்
18. வல்லகி யாழ்
19. வராளி யாழ்
20. விற்கோட்டி யாழ்
21. வில் யாழ்
22. பெருங்கலம் (பரவை யாழ்) 1008 நரம்புகள்
23. ஆதி யாழ்
24. தந்திரி யாழ்

## வீணை

வீணை என்ற இசைக்கருவி தேவாரக் காலத்திற்கு முன்பே உருப் பெற்றுவிட்டது.

கச்சரி கொக்கரை தக்கையோடு
தகுணித்தம் துந்துபி தாளம் வீணை - (11. 1. 9)
காரைக்கால் அம்மையார் மூத்த திருப்பதிகம்
'வேதங்கள் ஓதியோர் வீணை யேந்தி'
'பண்ணார்ந்த வீணை பயின்ற விறலவனே'
'ஏழிசையாழ், வீணை முரலக் கண்டேன்'
'பண்ணோடு யாழ் வீணை பயின்றாய் போற்றி'
'மிக நல்ல வீணை தடவி'

என்ற தேவார வரிகளிலும் 'இன்னிசை வீணையர் யாழினர்

ஒருபால்' என்ற திருவாசக வரியிலும் வீணையும் யாழும் தனித்தனிக் கருவிகள் என்று புலப்படுகின்றன. வீணை யாழ் வகையில் ஒன்றான செங்கோட்டியாழின் அடியொற்றி அமைக்கப்பட்ட ஒரு நரம்புக் கருவியே என்பதும் புலப்படும். வடமொழி வேதங்களில் வீணை என்ற பதமே இல்லை. சங்க நூல்களில் வீணை என்ற பெயர் காணப்படவில்லை. யாழைத் தவிர, சங்கத் தொகை நூல்களில் வேறு நரம்புக் கருவிகளின் பெயர் கூறப்படவில்லை.

மிடற்றுக்கும் வீணை என்ற பெயர் வழங்கப் பட்டுள்ளது. அதைச் சரீர வீணை என்று அழைத்துள்ளனர்.

யாழில் எப்படி ஒன்று முதல் 1000 நரம்புகள் கொண்ட யாழ் வகைகள் இருந்தனவோ அவற்றைப் போல் வீணையிலும் பல வகைகள் இருந்துள்ளன. பரத முனிவர் தம் நாட்டிய சாஸ்திரத்தில் 22 வகையான வீணைகளைப் பற்றிக் கூறுகிறார்.

**பரதர் கூறும் 22 வகை வீணைகள்**

1. மகதி
2. சித்திரா
3. கோசா வணி
4. சித்திரிகை
5. கூர்மிசை
6. சாரங்கம்
7. இராவணாசுரம்
8. கின்னரி வராளி
9. கீஸ்தி
10. குச்சிகை
11. விபஞ்சிகை
12. பரிவாதினி
13. சசன வல்லகி
14. சரவீணை

15. அநாவிகம்
16. பிரகதி
17. இலகுலாட்சி
18. கச்சரை
19. காந்தரி
20. அனுமதம்
21. உருத்திரிகை
22. கழாவதி

இவையன்றி, சததந்திரிகா, இக்சோவளி, கண்டா, பிச்சோரா, கோடா, தம்பலா என்ற வீணைகளும் இருந்துள்ளன எனத் தெரிகிறது.

மேற்கூறிய வீணையின் பெயர்களை நோக்கும் போது அவை யாழின் பெயர்களுடன் தொடர்புடையதாக உள்ளன.

| யாழின் பெயர் | - | வீணையின் பெயர் |
|---|---|---|
| 1. இராவணாசுர யாழ் | - | இராவணாசுரம் |
| 2. கின்னரி யாழ் | - | கின்னரி வராளி |
| 3. களாவதி யாழ் | - | கழாவதி |
| 4. கீசக யாழ் | - | கீஸ்தி |
| 5. மகதி யாழ் | - | மகதி |
| 6. தீக்குச்சி யாழ் | - | குச்சிகை |
| 7. கச்சபி யாழ் | - | கச்சரை |
| 8. பிரகதி யாழ் | - | பிரகதி |
| 9. வராளி யாழ் | - | கின்னரி வராளி |
| 10. தந்தரி யாழ் | - | சத தந்திரிகா |
| 11. சகோட யாழ் | | |
| செங்கோட்டி யாழ் | - | கோடா |
| 12. தும்புரு யாழ் | - | தம்பலா |
| 13. வல்லகி யாழ் | - | சகினவல்லகி |

மேற்கூறியவைகளிலிருந்து பார்க்கும் போது யாழ் என்ற கருவியே வீணை என்று பெயர் மாற்றம் பெற்று அழைக்கப்பட்டுள்ளதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

பாண்டிய நாட்டில் உள்ள திருப்பெருந்துறையில் வாழ்ந்த சைவ சமயப் பெரும்புலவர் அரபத்த நாவலர் கி.பி. 13ஆம் நூற்றாண்டிற்குப் பின் எழுதிய பரதசாத்திரம் என்னும் நூலில் வீணை வகைகள் 23 எனக் குறிப்பிட்டுள்ளார் இதில் பரதர் குறிப்பிட்டு உள்ள 22 வீணைகளின் பெயர்களும் சிறு எழுத்து மாற்றங்களுடன் கொடுக்கப்பட்டுள்ளன. கின்னரியும், வராளியும் தனித்தனியாகக் கொடுக்கப்பட்டதால் 23 வீணைகளின் பெயர்கள் உள்ளன.

அரபத்த நாவலர் கூறும் வீணை வகைகள்

1. சித்திரா
2. சிந்திரிகை
3. கூர்மிகை
4. சாரங்கி
5. இராவணாசுரம் (இராவணனுக்குரியது)
6. கின்னரி
7. வராளி
8. குச்சிகை
9. விபஞ்சி
10. பரிவாதினி
11. சகன வல்லகி
12. சரவீணை
13. அக ரவிதம்
14. மகதி (நாரதருக்கு உரியது)
15. பிரகதி (தும்புருக்கு உரியது)
16. இலகுவாச்சி
17. உருத்திரிகை

18. களாவதி
19. கச்சளா (சரஸ்வதி)
20. காந்தாரி
21. அனுமதம் (அனுமனுக்கு)
22. கீஸ்தி
23. கோசாவளி

இவை தவிரப் பல அரிய வீணைப் பெயர்களும் உள்ளன.

## 9. வில்லடி வாத்தியம்

தமிழ் நாட்டிலும் கேரள தேசத்திலும் காணப்படும் வில்லடி வாத்தியம் வில்லைப் போன்ற உருவமுடைய இசைக்கருவி. வில் போன்ற ஓர் இசைக் கருவியை ஒலிக்கச் செய்து பாடுவதால் இதற்கு 'வில்லுப்பாட்டு' என்று பெயராயிற்று. சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லார் பாமர மக்கள் பரம்பரையாகப் பாடி வருகின்ற பாடலைப் 'பல்வரிக்கூத்து' என்று விளக்குகிறார். இதில் வில்லுப்பாட்டும் ஒன்றாகக் கருதப்படுகிறது.

### வில்லடி கருவியின் அமைப்பு

இந்த வில்லின் அடிப்பகுதி பனை மரத்தின் அடிமரத்தால் ஆனது. முற்றிய பனைமரத்தை 2 அல்லது 3 மீட்டர் நீளமும் 8¾ செ.மீ. கனமும் கொண்டதாகச் செதுக்கி அதன் இரு முனைகளிலும் வெண்கலக் குப்பிகளைப் பொருத்துவர். இதை வில்கதிர் என்று அழைப்பர். அதனைத் தோல் அல்லது நூல் கயிற்றால் இறுக்கி வில் போன்று கட்டுவர். கயிற்றில் 9 அல்லது 11 வெண்கல மணிகளைப் பொருத்துவர். அந்த வில்லின் நடுப்பாகம் குடத்தின் கழுத்தோடு சேர்த்து இணைத்துக் கட்டப்பட்டிருக்கும். இந்த மண்குடம் குறுகலான வாயையுடையதாக இருக்கும். வில்லின் கயிற்றில் அடிப்பதற்காக இரண்டு வீசுகோலினைக் கையில் வைத்திருப்பர். வில்லுடன் இணைக்கப்பட்டுள்ள குடத்தின் குறுகலான வாயைத் தோல்பட்டையில் அடித்துக் கும்கார ஒலியை எழுப்புகின்றனர். அல்லது கமுகம் பாளையினால் செய்யப்பட்ட ஒரு

மட்டையைக் கொண்டு அடிக்கின்றனர். மண் பானை ஒலி பெருக்கியாக அமைகிறது.

தமிழ் நாட்டின் தென்பகுதியில் உள்ள திருநெல்வேலி, தூத்துக்குடி, கன்னியாகுமரி, இராமநாதபுரம் மாவட்டங்களில் கிராமத் தேவதைகளுக்கான திருவிழாவின்போது வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. தமிழ் நாட்டின் பழம்பெரும் கிராமியக் கலைகளில் ஒன்று வில்லுப்பாட்டு.

திருநெல்வேலி ஐயம்பிள்ளை, குலதெய்வம் இராச கோபால், சாத்தூர் பிச்சைக்குட்டி, சுப்பு ஆறுமுகம் முதலியோர் இக் கலையில் வல்லுனர்கள்.

## வில்லடி வாத்தியம்





The *villadi vadyam*. Tamil Nadu.

## 10. துந்தினா

இது மீட்டி வாசிக்கப்படும் ஒரு நரம்புக் கருவி. ஒரு தந்தி மட்டுமே கொண்டது. இது பாடுபவருக்குச் சுருதி ஒலியை மட்டும் கொடுக்கும். கருங்காலி மரத்தால் செய்யப்பட்ட மரக் குடத்துடன் ஒரு நீண்ட மூங்கில் மரத் துண்டினை இணைத்து அதன் முனையில் ஓர் உலோகக் கம்பியைக் குடம் வரை இழுத்துக் கட்டி, வலதுகை ஆள்கட்டி விரலால் மீட்ட நாதம் எழும். இது பிரம்ம வீணை என்றும் அழைக்கப்படுகிறது.

தற்காலத்தில் பரங்கிக்காய்க் குடுக்கை அல்லது சுரைக்காய்க் குடுக்கையின் மையத்தில் துளையிட்டு 2 அல்லது 2½ அடி நீளத்தில் மூங்கில் மரத் துண்டின் ஒரு நுனியில் தந்தியைச் சுற்றும் முறுக்காணியைப் பதித்து அதில் தந்தியைப் பொருத்தி மீட்ட, நாதம் எழும். இதில் சுருதியும் தாளமும் கிடைக்கும். இது கிராமிய மக்களாலும், பரதேசிகளாலும் பயன்படுத்தப் படும் கருவியாகும். குண்டினே என்று மத்திய, மேற்கு இந்தியாவிலும் காணப்படுகிறது. மகாராஷ்டிரத்தில் நாடகங்களிலும், நாடோடிக் கதைப் பாடலுக்கும் இது பயன்படுத்தப்படுகிறது. இதனுடன் நெருங்கிய தொடர்புடைய கருவி வங்காளம், ஒரிஸ்ஸா மாநிலங்களில் காணப்படும் கோபியந்திரம் அல்லது ஏக்தார் ஆகும்.

இக்கருவியைப் பக்த மீரா கையில் வைத்துக் கொண்டுள்ள சிற்பங்களும், ஓவியங்களும் நம்மால் இன்றும் காண இயலும். இவை வட இந்தியாவில் ஒரு தந்தி கொண்டிருந்தால் 'ஏக்தார்' என்றும், இரண்டு தந்திகள் கொண்டு இருந்தால் தோதார் (குஜராத்தில் ராம்சாகர் என்னும் கருவி) என்றும் இவ்வாறு தந்திகளின் எண்ணிக்கைக்கு ஏற்பப் பெயர் பெறுகிறது. இன்று இசை நிகழ்ச்சிகளில் பயன்படுத்தப் படும் தம்புரா என்னும் நான்கு தந்திகள் கொண்ட கருவி இதன் வளர்ச்சி அடைந்த நிலையே. இதுவும் மீட்டி வாசிக்கப்படும் சுருதிக் கருவியே.

துந்தினா





## 11. கின்னரி

இது ஓர் நரம்புக் கருவி. உலோகத் தந்திகளை உடையது. இது கின்னரி யாழ் என்றும் பெயர் பெற்றுள்ளது. இவ்வாறு சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி கூறுகிறது. இதில் பல வகைகள் உண்டு. பெரிய கின்னரி , சின்னக் கின்னரி, சிரட்டைக் கின்னரி, அகப்பைக்கின்னரி என்பன ஒரு வகைக் கின்னரிகள். மலைவாழ் மக்களிடம் இன்றும் காணப்படு கின்றன. பெங்களூரில் பகவான் கடிகோயில் கல்வெட்டில் கின்னரி பற்றிய குறிப்பு உள்ளது. இது கைவிரல்களால் தெறித்து இசைக்கப்பட்டது. வலக்கையில் தெறித்துக் கொண்டு இடக்கையால் சுரஸ்தானங்களில் அழுத்தி இசைக்கப்படுவது. சிரட்டைக் கின்னரி என்பது வில் போட்டு வாசிக்கப்படுவது.

தம்தம் கின்னரம் தொடுகிலோ (திவ்ய. - 279)

சிறிய கின்னரிக்கு இரண்டு குடங்களும், பெரிய கின்னரிக்கு மூன்று குடங்களும் உள. குடங்கள் தண்டியின் முனையில் பொருத்தப்பட்டிருக்கும். இதன் மெழுகுச் சட்டம் மூங்கிலால் அமைக்கப்பட்டிருக்கும். இது சுமார் 14 அங்குல நீளம் 7 அங்குலச் சுற்றளவும் கொண்டது. மூங்கிலின் மையத்தில் தேன் மெழுகில் மை கலந்து உறுதிப்படுத்துவதற்காகச் செங்கல் பொடியையும் கலந்து செய்யப்பட்ட மெழுகை அந்த மூங்கிலில் பரப்பி அதில் ஓர் அங்குல நீளமும் ½ அங்குலப் பருமனும் உள்ள 14 உலோகக் கம்பிகளை முறையே மெழுகுச் சட்டத்தில் பதிக்க வேண்டும். தண்டியின் தலைப்பகுதியில் சிறிய துளையிட்டு அதில் 2½ அங்குலக் கனமுள்ள மரக்கட்டையைப் பதித்து அதிலிருந்து 2½ அங்குல அகலத்தில் ஒரு குதிரை அமைத்து அதில் யானை உரோமத்தின் பருமன் உள்ள நான்கு இரும்புக் கம்பிகளைப் பிரடையுடன் இணைத்துச் சுருதி கூட்டி மீட்டி வாசிக்க இனிய ஒலி எழும். இந்தக் கின்னரி வீணை பற்றிச் சோமநாதர் (1550 - 1620) தம் நூலில் (இராகவிபோதம்) குறிப்பிடுகிறார்.

பெரிய கின்னரி என்பது மூன்று குடங்கள் கொண்டது. நடுவில் உள்ள குடம் மற்ற இரண்டு குடங்களை விடப் பெரியது. இதன் விரல் பலகை கருங்காலி அல்லது மூங்கிலால் செய்யப் பட்டிருக்கும். இதன்மேல் உலோகம் அல்லது எலும்பினால் ஆன 12 மெட்டுக்கள் பதிக்கப்பட்டிருக்கும். இரண்டு அல்லது மூன்று தந்திகள் இருக்கும். ஒன்று மெட்டுக்களின் மேலும், பிற சுருதிக்காகவும் பயன்படுத்தப்படும். இந்தக் கின்னரிகள் வடக்குக் கருநாடகப் பகுதிகளிலும், மைசூரிலும் காணப்படுகின்றன. பெங்களூரில் உள்ள பசவன்குடி கோயிலின் முன்புறம் உள்ள தூணில் கின்னரி வாசிப்பவரின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது.

குஜராத் மாநிலத்தில் உள்ள செஞ்சி மக்களிடம் கின்னரி என்ற இசைக்கருவி உள்ளது. இது மூன்று சுரக் குடுக்கையையும், ஒலி பரப்பும் பலகையையும் இரு தந்திகளையும் கொண்டது. இது திறந்த மூங்கில் நுனிகளைக் கொண்டது. இது இரண்டு நரம்புகளை உடைய யாழ் இனத்தைச் சேர்ந்தது. இது வீணை என்றும், தவிதந்திரிகா என்றும் அழைக்கப்படுகிறது.

கின்னரியின் நாதத்தால் கவரப்பெற்ற அலெக்சாண்டர் மன்னரும் மற்றும் படைத் தளபதிகள், தம்முடன் இக்கருவியையும், தென்னாட்டு இசைக் கலைஞர்களையும் கிரேக்க நாட்டிற்கு அழைத்துச் சென்றனர் என்று ஆய்வாளர் கூறுகின்றனர். Curt sachs என்ற இசையறிஞர் கூற்றுப்படி அரசன் டேவிட் (King David) என்பவரின் (Kinnar) கின்னர் என்ற கருவியும் கின்னரி என்ற தென் இந்திய நரம்புக் கருவியின் பெயர் ஒற்றுமையையும் இங்குக் குறிப்பிடலாம் என்று K. தண்டபாணி தம் ‘இசையே உலகம்’ என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். எனவே கின்னரி என்ற நரம்புக் கருவி கடல் கடந்த நாடுகளுக்கும் சென்றுள்ளது என்று தெரிய வருகிறது.

## அகப்பைக் கின்னரி

தென்னங் கொட்டாங்கச்சியில் ஒரு கம்பைச் சொருகி இணைத்து வைத்துக் கொண்டு கற்றாழை நாரால் ஆக்கப்பட்ட நரம்புகளைக் கட்டி, வில் போட்டு வாசிப்பர். இது ஒரு விளையாட்டுக் கருவி எனவும் கூறலாம். இக்கருவி காஞ்சிபுரம் கைலாசநாதர் கோவில் சுவரில் காணப்படுகிறது.

இராமேஸ்வரம் கோயிலில் கின்னரி உருவம் மிகச் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளது.

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள ஆதி கேசவப் பெருமாள் கோயிலில் சிவன் தாண்டவமாடும் சிற்பங்களில் நந்தி முழவும், திருமால் இடக்கையும், நாரதர் கின்னரியும் வாசிப்பது போலச் சிற்பம் உள்ளது.

**கின்னரி**



## இரண்டு குடம் கொண்ட லகு கின்னரி




Laghvi Kinnari Veena of Someswara



The *kinnari*. Karnataka

## 12. விபஞ்சி வீணை

சேக்கிழார் தம் பெரிய புராணத்தில் திரு ஞானசம்பந்தர் திருமணத்தில் விபஞ்சிவீணை என்ற வீணை மீட்டப் பெற்ற சிறப்பைக் கூறுகிறார்.

*கோதையர் குழல் சூழ் வண்டின் குழாத்தொலி யொரு பாற் கோல*
*வேதியர் வேத வாய்மை மிகு மொலி யொருபான்மிக்க*
*ஏதமில் விபஞ்சி வீணை யாழொலி யொருபாலேத்தும்*
*நாதமங் கலங்கள் கீத நயப்பொலி யொரு பாலாக*

பெரிய புராணம் - 1200

வால்மீகியின் வடமொழி இராமாயணத்தில் (கி.பி. 400) இந்த விபஞ்சி வீணை ஒன்பது நரம்புகள் உடையது என்று கூறப்பட்டுள்ளது. இதைப் பற்றிய விளக்கமும் பரத முனிவரின் நாட்டிய நூலின் உரை விளக்கத்துள் கூறப்பட்டுள்ளது. விபஞ்சி வீணை சில்லால் இசைக்கப்பட்டது என்கிறார். வால்மீகி இராமாயணத்தில் வீணை அனுமன், சுக்கிரீவன், வாலி ஆகியோரால் போற்றப்பட்டுள்ளது.

விபஞ்சி வீணை பற்றிச் சரஸ்வதி மகால் நூலக வெளியீடு கூறுவதாவது :

> செஞ்சந்தன மரம், கடுக்காய் மூங்கில் போன்ற மரங்களைக் கொண்டு இவ்வீணையின் தண்டி செய்யப் படுகிறது. இந்தத் தண்டி (மெழுகுச் சட்டம் பொருந்துமிடம்) உருண்டு திரண்டு வளையாமல் சமமாக இருக்கும் மரமாகத் தேர்ந்தெடுத்துச் செய்யப்படுகிறது. பின் தேன் மெழுகை உருக்கி அதனைத் தூய்மையான துணியில் தடவி நெருப்பிலிட்டுக் கரித்துப்பின் கரித்தூளைப் பொடி செய்து தேன் மெழுகுடன் கலக்க அது கருப்பு நிறமாகிவிடும். அதனைக் கெட்டியாக்கச் செங்கல் பொடியுடன் கலந்து தண்டத்தின் மீது வைத்து மெழுகுச் சட்டம் செய்து பின் மெட்டுக் கம்பிகளைப் பொருத்துவர். விபஞ்சி வீணைக்கு 4 தந்திகளும், தாளத்திற்காக ஒரு தந்தியும் ஆக 5 தந்திகள் உள்ளன. இந்தத் தந்தியின் கனம் யானை மயிரின் அளவு என்று கூறப்பட்டுள்ளது.

17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுருபரரின் முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழில் விபஞ்சி வீணை பற்றிக் கூறப்பட்டுள்ளது.

## 13. கச்சபி வீணை







The *kacchapi* ( ? ). Ajanta. Note the primitive frets.

## 13. கச்சபி

இக்கருவி பழங்காலந் தொட்டே மக்களிடம் செல்வாக்குப் பெற்றுப் பின் மறைந்ததாகும். இந்தியாவில் கச்சபி கி.மு. 200க்கும் கி.பி. 400க்கும் இடைப்பட்ட காலத்தில் இருந்துள்ளதாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அஜந்தா, நாகார்ஜுன கொண்டா போன்ற குகை ஓவியங்களில் கச்சபி வீணை உருவங்கள் காணப்படுகின்றன. (Murical Instrument of India B. Dav. p.139) கச்சபி வீணை இந்தியாவில் மறைந்தாலும் பிலிப்பைன்ஸ் (Philipines) தேசத்தில் கட்ஜயாபி (Kadjyapi) என்ற பெயருடன் இன்றும் வழங்கப்பட்டு வரும் கருவி உள்ளது என்று கூறுகிறார் ஆய்வாளர் திரு. தண்டபாணி.

## 14. பரிவாதினி

இதில் பல்வேறு வகைகள் உள்ளன. தந்திகளின் எண்ணிக்கையைப் பொறுத்துப் பெயர்கள் உள்ளன. 7 தந்திகள், 13 தந்திகள், 14 தந்திகள் கொண்ட நரம்புக் கருவிகள் உள்ளன. பரிவாதினியில் மெழுகுச் சட்டத்தில் 4 தந்திகளும், தாளத்திற்கு 3 தந்திகளும் மொத்தம் 7 தந்திகள் இருந்துள்ளதாகத் தெரிகிறது. கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டு அரசாண்ட மகேந்திர பல்லவன் காலத்தில் புதிய வடிவமைக்கப்பட்ட நரம்புக் கருவி இதுவே என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. இக்கருவியில் தந்தமும், மணிகளும் பதிக்கப்பெற்று இருந்தன என்றும் 8 பொன் தந்திகள் பூட்டப் பெற்றிருந்தன என்றும் கூறப்படுகிறது. இச்செய்தி குடுமியான் மலைக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 15. இராவண வீணை

நீண்ட மூங்கில் தண்டின் நுனியில் 5 அங்குல அளவில் சிறிது பள்ளமாக வெட்டிக் கொண்டு பக்க வாட்டாக ஒரு துளை செய்து அதில் சங்கு என்னும் பிரடையைப் பொருத்திக் கொள்ள வேண்டும். ஒரு பெரிய தேங்காயின் தலையிலும், கீழ்ப் பகுதியிலும் மூங்கிலின் அளவுக்கு ஓட்டை செய்து உள்ளிருக்கும் தேங்காய்ப் பருப்பை நீக்கி அதில் இந்த மூங்கிலை அசையாத வண்ணம் பொருத்த வேண்டும். தேங்காயுள்

மூங்கிலைப் பொருத்தியுள்ள இடத்திற்கு அருகே காய்ந்து போன தோலை வைக்க வேண்டும். இதுவே நாதம் கொடுக்கும் சீவாளி போன்றது.

குதிரை வால் மயிரை நன்றாகத் திரித்து உறுதியாக்கிக் கீழேயுள்ள மூங்கிலில் பொருத்தித் தலையிலுள்ள முறுக்காணி (பிரடை)யில் சுற்றிச் சுருதிக்கு ஏற்றபடி கூட்டி வலக்கை ஆள் காட்டி விரலால் மீட்ட நாதம் எழும். இது துந்தினாவின் ஒரு வகையாகும். இதுவே இராவண வீணை என்றும் கூறப்படுகிறது. இதன் அமைப்பைப் பார்க்கும்போது இது ஒரு சுருதியைக் கொடுக்கும் கருவியே. இதில் பண் வாசிக்க முடியாது எனத் தெரிகிறது.

## 16. விசித்திர வீணை

கோட்டுவாத்தியம் போல மெட்டுக்கள் இல்லாதது. மரத்தால் செய்யப்பட்ட தண்டியின் மேல் விரல் பலகை 3¼ அடி நீளம் உள்ளது. இரண்டு குடங்கள் தண்டியின் இரு முனைகளிலும் பொருத்தப்பட்டுள்ளன. தந்தத்தால் ஆன குதிரை குடத்தின் மேல் உள்ளது. உலோகம் மற்றும் பித்தளையினால் ஆன 6 வாசிக்கும் தந்திகள் தண்டியின் மேல் சென்று பிரடையுடன் இணைக்கப்பட்டுள்ளன. வலது கையினால் வாசிக்கும் தந்திகள் மீட்டப்படுகின்றன. இடது கையினால் ஒரு மர அல்லது கண்ணாடி உருளையைத் தேய்ப்பதன் மூலம் வாசிக்கப்படுகிறது. வாசிக்கும் தந்தியின் கீழ்ப் பல பரிவு ஒலி அதிர்வுத் தந்திகள் (12) உள்ளன.





## 17. நிசங்க வீணை

இந்த நரம்புக் கருவி சாரங்க தேவரால் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்டது என்று கூறப்படுகிறது. கருவியின் ஒரு முனையில் ஒரு மரக்குடம் உள்ளது. இது சுமார் 4 அடி நீளம் உள்ளது. தண்டியின் ஒரு முனையிலிருந்து இரண்டு அங்குலத்தில் ஒரு நரம்பு மறுமுனையில் உள்ள ஒரு மரத்துண்டில் கட்டப்பட்டுள்ளது. மரத்துண்டு உள்ள பகுதியின் கீழ் ஒரு மரக்குடம் உள்ளது. இக்கருவி வில் போட்டும், மீட்டியும் ஆகிய இருவகைகளில் வாசிக்கப்படுகிறது. வில் இடது கையால் போட்டு வாசிக்கப்படுகிறது. மீட்டி வாசிக்க ஒரு சிறிய உலர்ந்த தோல் பயன்படுத்தப்படுகிறது.



Nissanka Veena

## 18. பினாகி வீணை

இவ்வீணையின் தண்டி 41 அங்குலம் நீளம் உள்ள ஒரு வில் போன்றது. வில்லின் அகலம் மத்தியில் 1 அங்குலம். வில்லின் இரு முனைகளிலும் ஓர் அங்குல நூல் கற்றை வைக்கப் பட்டுள்ளது. இரண்டு வட்ட வடிவத் திறந்த வாயுடன் கூடிய தேங்காய் ஓடுகள் வில்லின் இரு முனைகளிலும் வைத்துக் கட்டப்படும். வில்லின் இரு முனைகளிலும் நரம்பு இழுத்துக் கட்டப்பட்டிருக்கும். இந்த வீணை கைவில் போட்டு வாசிக்கப் படுவது. கைவில்லின் 21 அங்குலம் கைவில்லால் வாசிக்கப்படும் இடம் 3 அங்குலமாகும். கைவில்லில் உள்ள நரம்புகள் குதிரையின் குடல் நரம்புகளால் ஆனவை. வாசிக்கும் போது பினாகி நரம்புக் கருவியின் ஒரு முனையில் உள்ள குடம் கால்களுக்கிடையே வைக்கப்படும். மறுமுனை வாசிப்பவரின் தோள்களில் வைத்துக் கொண்டும் வாசிக்கப்படும். இடது கையில் கருவியைப் பிடித்துக் கொண்டு வலது கையால் வில் போட்டு வாசிக்கப்படும் கருவியாகும்.



Pinaki Veena

## 19. ருத்திரவீணை

இவ்வீணை வட இந்தியாவில் இன்றும் கலைஞர்களால் வாசிக்கப்பட்டு வருவதாகும். இது கின்னரி வீணையின் வளர்ச்சி என்றும் கிராமியக் கலையில் பயன்படுத்தி வரும் தண்டியின் வளர்ச்சி என்றும் இசை ஆராய்ச்சியினர் கருதுகின்றனர். கின்னரி வீணையில் வாசிக்கும் முறைகளே ருத்திர வீணையிலும் கடைப்பிடிக்கப்படுகின்றன. இதில் உள்ள தண்டி மூங்கிலால் செய்யப்பட்டது. இதில் வாசிக்கும்

தந்திகள்4. தண்டியின் கீழ் இரு முனைகளிலும் இரண்டு பெரிய குடங்கள் கொண்ட ஓர் இசைக்கருவி, விரல் கொண்டு மீட்டி வாசிக்கப்படும். நரம்புக்கருவி மெட்டுக்கள் விரல் பலகை முழுவதும் காணப்படும். தமிழ்நாட்டில் பட்டீஸ்வரம் கோயிலில் உள்ள சிற்பத்தில் ருத்திர வீணை காணப்படுகிறது. இது படுக்கை நிலையில் வைத்து வாசிக்கப்படாமல் (வீணை போல) நேரான, செங்குத்தான நிலையில் வைத்து, ஒரு குடம் மடியிலும் மற்றொன்று மேல்புறமும் இருக்குமாறு சிற்பத்தில் செதுக்கப் பட்டுள்ளது. தற்போது இக்கருவியின் முழுநிளம் 3 அடி 7அங்குலமாக உள்ளது. இதன் குடங்கள் 14 அங்குலச் சுற்றளவு கொண்டவை. வீணை போன்றே வாசிக்கும் 4 தந்திகளும், 3 தாளத்தந்திகளும், (சுருதித் தந்திகளும்) கொண்டது. 4 வாசிக்கும் தந்திகளும் பித்தளையால் செய்யப்பட்டவை. இதில் 19 முதல் 22 மெட்டுக்கள் காணப்படுகின்றன.





Rudra Veena

## 20. தண்டிப் பானை

மலைவாழ் சாதியினரால் பயன்படுத்தப்பட்டுள்ள ஒரு கிராமிய நரம்புக் கருவி. உட்புறம் உலோகக் கம்பியைக் கொண்ட ஒரு மண்பானையே இக்கருவியின் உடல். ஆதிகாலத்தில் நரம்புப்பானை என்று அழைக்கப்பட்டது. நரகுண்டா, தந்தி குண்டா என்று தெலுங்கு மொழியில் அழைக்கப்படுகிறது. பானையின் வாய் ஆட்டுத் தோலால் மூடப்பட்டு அதன் நடுவே ஒரு துளையின் வழியாக ஓர் இரும்பு வளையம் உள் செலுத்தப்பட்டுள்ளது. இதன் உட்புறத்தில் ஒரு நரம்பு கட்டப்பட்டிருக்கும். நரம்பு குடத்தின் நடுவே உட்சென்று பின் ஒரு சிறு துளையின் வழியாக வெளியே வந்து குடத்தின் மேற்பாகத்தின் மேல் உள்ள மூன்று துளையுள்ள சிறு மரத்துண்டுகள் வழியாக ஒரு முறுக்காணியில் கட்டப் பட்டிருக்கும். முறுக்காணியைத் திருப்பி நரம்பின் சுருதி சரி செய்யப்படுகிறது. குடத்தின் உள்ளே நரம்பின் வழியாக 7 சிறிய உலோக வில்லைகள் கோர்க்கப்பட்டிருப்பதால் நரம்பை மீட்டும் போது அவையும் அதிர்ந்து நல்ல ஒலியை உண்டாக்குகின்றன. குடத்தின் தோல் கட்டிய முகத்தின் நடுவில் வலக்கையின் நடு விரலாலும் இடது கையாலும் மாறி மாறி வாசிப்பர். நரம்புகளின் கனத்திற்கு ஏற்பச் சுருதியை மாற்றி அமைக்கலாம். தந்திப்பானை ஒரு சுருதிக் கருவியாகவும், ஒரு தாளக் கருவியாகவும் உள்ளது.



## 21. வீணைக் குஞ்சு

இக்கருவி கேரள மாநிலத்தில் பள்ளுவர் என்ற சாதி மக்களாலும், மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதி மக்களாலும் வில் போட்டு வாசிக்கும் ஒரு நரம்புக் கருவியாகும். மெல்லிய தோலால் மூடப்பட்ட ஒரு வட்ட வடிவக் குடத்துடன் ஒரு விரல் பலகை இணைக்கப்பட்டிருக்கும். ஒரே ஒரு நரம்பு குதிரை வழியாக, உடம்புப் பகுதி வழியாக விரல் பலகை மற்றும் கழுத்து வழியாக ஒரு முறுக்காணியில் கட்டப் பட்டிருக்கும். நரம்பின் மேல் ஒரு நீண்ட வில் போட்டு வாசிக்கப்படுகிறது.






## 22. நந்துனி

தற்கால வீணை இக்கருவியிலிருந்து வளர்ச்சி அடைந்தது என்று கூறலாம். தற்போது இது கேரளாவிலும், மலபார் கோயில்களிலும் வாசிக்கப்படும் ஒரு நரம்புக்கருவி. இது மீட்டி வாசிக்கப்படும் கருவி. சுமார் 80 சென்டிமீட்டர் நீளம் உள்ள ஒரே மரத்துண்டினால் ஆன சிறிய நரம்புக் கருவி. இசை ஒலி பெருக்கியின் மேல் சிறிய குதிரை உள்ளது. கொம்புகளால் ஆன மெட்டு மெழுகினில் பதிக்கப்பட்டது.

உறுதியான மெட்டுக்கள் கொண்டது. விலங்குகளின் குடல் நரம்பினால் ஆன மூன்று நரம்புகள் கொண்ட கருவி. நரம்புகள் வில் கொண்டு மீட்டப்படுகின்றன.

(நந்துனி - நேர் தோற்றம்)



நந்துனி பக்கவாட்டுத் தோற்றம்



## 23. கூர்ம வீணை

இதன் உடல் இசை ஒலி பெருக்கிப் பகுதி ஆமை (கூர்மம்) வடிவமானது. வில் போட்டு வாசிக்கும் நரம்புக் கருவி வகையைச் சேர்ந்தது. மைசூர் மாநிலத்தில் நரசிப்பூர் தாலுகாவில் திரும கூடலு கோயிலில் இக் கருவியின் சிற்பம் உள்ளது.

## 24. புள்ளுவன் குடம்

இது மலபாரில் உள்ள மலை வாழ் மக்கள் பயன் படுத்தும் ஒரு நரம்புக் கருவி. இது பாம்பு வழிபாட்டில்

பயன்படுத்தப்படுகிறது. இது அடியில் வட்ட வடிவத் துளை கொண்ட மண்குடம் கொண்டது. குடத்தின் வாய் ஒரு தோலால் கட்டப்பட்டுள்ளது. தோலின் வெளிப்பகுதிலிருந்து நடுவில் ஒரு கயிறு கட்டப்பட்டு, குடத்தின் உட்புறம் வழியாக, அடியில் உள்ள துளை வழியாக ஒரு மரக்கட்டையில் உள்ள ஓர் உலோகக் கிண்ணத்தில் கட்டப்பட்டிருக்கிறது. ஒரு குச்சியைக் கொண்டு கயிற்றினால் அடிக்கும் போது குடம் இசை ஒலிபெருக்கியாக இயங்கும். கிண்ணத்திலிருந்து மண்குடத்தை எதிர்த் திசையில் நகர்த்தக் கயிறு இறுக்கமாகும். சுருதி வேறுபடும்.



**புள்ளுவன் குடம்**

## 25. சுரமண்டலம்

நம் நாட்டில் இன்றும் காணப்படும் பெட்டிக் கருவி சுரமண்டலமாகும். இது (வட இந்திய) காஷ்மீரில் உள்ள சந்தூர் என்ற இசைக்கருவியைப் போன்றது. ஒரு மரப்பெட்டியின் மீது தந்திகள் கட்டப்பட்டு உள்ளன. சந்தூர் என்ற கருவியை விட உருவத்தில் சிறியது. இதில் குதிரைகள் இல்லை. ஒவ்வொரு சுரத்திற்கும் ஒரு தந்திதான் இருக்கும். சுரமண்டலத்தின் தந்திகள் அவற்றின் விளிம்புகள் மேல் சென்று முனைகளில் உள்ள முளைகளில் (பிரடை) கட்டப்பட்டிருக்கும். உலோகக் கம்பிகளான நெளிகலை விரலில் பொருத்திக் கொண்டு இதை மீட்டுவார்கள். இந்தச் சுரமண்டலத்திற்குப் பழங்காலத்தில் ‘மத்த கோகிலம், மத்த கோகில வீணை என்னும் பெயர்கள் இருந்ததாகத் தெரிகிறது. இக்கருவி பற்றிய குறிப்புகள் 15 ஆம் நூற்றாண்டிலிருந்தே கிடைக்கின்றன. இது மேற்கு ஆசியாவில் கானூன் என்ற கருவியாகவும், சிரியாவில் இதோரோ என்ற

கருவியாகவும் உள்ளது. மேலை நாடுகளில் 'ஸால்டரி' என்று அழைக்கப்படுகிறது. இதில் உள்ள 21 தந்திகளுள் சில உலோகக் கம்பிகள், சில பித்தளைக் கம்பிகள் சில நரம்புகள் உள என்று ஆயின்-இ அக்பரி என்ற நூல் கூறுகிறது.

சாரங்க தேவர் தம்முடைய சங்கீதரத்னாகரம் (12ஆம் நூற்றாண்டு) என்ற நூலில் சுரமண்டலம் யாழின் அடுத்த உரு என்கிறார். முப்பது ஆண்டுகளுக்கு முன் வரை தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள வைத்தீஸ்வரன் கோயிலில் சுரமண்டலம் யாழாக எண்ணி இசைக்கப்பட்டுள்ளது. இங்கு, சுரமண்டலத்தை இயக்குபவர் 'சுரமண்டலிப் பண்டாரம்' என்று அழைக்கப் பட்டுள்ளனர்.

தமிழ்நாட்டில் இது கருங்காலி, சந்தனம், செஞ்சந்தனம், பூதமரம், வைரம் பாய்ந்த பலாமரம் ஆகிய மரவகைகளால் செய்யப்பட்டுள்ளது. இதன் நீளம் 20 அங்குலமாக உள்ளது. இக்கருவியின் மையத்தில் வறுவாய் இருக்கும். வறுவாய் இல்லாமலும் ஸ்வர மண்டலிகள் உள்ளன. தந்திகள் மேலிருந்து கீழாகச் சமமாகப் பொருத்தப்பட்டிருக்கும். வலிவு மண்டிலம் (தாரஸ்தாயி) சமன்மண்டிலம் (மத்யஸ்தாயி) மெலிவு மண்டிலம் (மந்திரஸ்தாயி) ஆகிய மூன்று மண்டிலங்களுக்கும் மொத்தம் 21 தந்திகள் உள்ளன. இவற்றில் 7 தந்திகள் பட்டு நூலிலும், 7 தந்திகள் உலோகத்தினாலும் (இரும்பு) 7 தந்திகள் பித்தளையினாலும் செய்யப்பட்டிருக்கும். தந்தியின் கனத்திற்கு ஏற்பச் சுருதி வேறுபடும். விரல் நகங்களைக் கொண்டு வாசிக்கப் பட்டுள்ளது. சில சமயங்களில் மரவில்லை (சிறியமரத்துண்டு) கொண்டும் வாசிக்கப்பட்டுள்ளது. பழங்காலச் சுரமண்டலிக் கருவியின் வெளிவடிவம் 5 மூலைகள் கொண்டதாக உள்ளது. பிற்காலச் சுரமண்டலிகள் 4 மூலைகள் கொண்டதாக உள்ளன. வலிவு மண்டிலத் தந்திகளின் நீளம் மெலிவு, சமன் மண்டிலத் தந்திகளின் நீளத்தை விடக் குறைவாக உள்ளது. தற்காலச் சுரமண்டலி 1½ முதல் 2 அடி நீளமும், 1 முதல் 1½ அடி அகலமும், 3 முதல் 4½ அங்குலம் உயரமும் கொண்டதாக உள்ளது. இக்கருவியே பின்னால் 'பியானோ' என்ற கருவி தோன்றக் காரணமாக இருந்துள்ளது என்று (பைபிள்) ஆகமம் கூறுகிறது.

## 25. சுரமண்டலம்



*Qānun* or *Svaramandal*



*Svara mandal* or Qānun Baroda-1904 A. D.





*The concert sarangi. North India*



*The Sindhi sarangi and the Gujeraian sarangi.*
Both are folk instruments. Rajasthan.

## 26. சாரங்கி - இசைக்கருவி

இந்தியாவின் மிகப் பழமையான நரம்பிசைக் கருவி இது. சுமார் 1200 ஆண்டுகளுக்கு முற்பட்ட வில் போட்டு இசைக்கும் ஒரு நரம்புக் கருவி. இதன் உடல்பகுதி (குடம்) ஒரே மரத்தில் குடைந்து செய்யபபடும். இந்தக் குடத்தின் நடுப்பகுதி அமுக்கப்பட்டு வில் போடுவதற்கு ஏதுவாக இருக்கும். குடத்தின் கீழ்ப் பகுதி சதுரமாக இருக்கும். இதன் உயரம் சுமார் இரண்டு அடி இருக்கும். உடல்பகுதி அகன்றும் கீழ்ப் பகுதி இடுப்பைப் போலக் குறுகியும் இருக்கும். இதன் தொடர்ச்சியே தட்டையான சுரப்பலகை, தோலினால் மூடப்பட்டிருக்கும். கீழ்ப் பகுதியே ஒலி பெருக்கியாகப் பயன்படுகிறது. மேற்பகுதி பலகையினால் மூடப்பட்டிருக்கும். பிரதானத் தந்திகள் மூன்றும் நரம்பினாலானவை. சில நேரங்களில் ஒரு பித்தளைத் தந்தி சுருதிக்காகச் சேர்க்கப்படும். வட இந்தியக் கருவிகள் போலத் 'தரப்' எனப்படும் உப தந்திகள் உண்டு. இவை பரிவு ஒலி அதிர்வுத் தந்திகள் என அழைக்கப்படும். இவை 35லிருந்து 40 உடனியங்கும் தந்திகள் (பரிவு ஒலி அதிர்வுத் தந்திகள்) விரல் பலகையின் பக்கவாட்டில் உள்ள பிரடைகளுடன் இணைக்கப் பட்டிருக்கும். நிமிர்ந்து அமர்ந்த நிலையில் வாசிப்பவரின் மடியில் குடம் இருக்கும். பிரடைகள் பகுதி இடது தோள்பட்டை மேல் சாய்ந்திருக்கும். இடது கை விரல்கள் தந்திகளைத் தொட்டும் வலது கை வில்லினைத் தொட்டும் இசைக்கும். வில் குதிரை மயிர்களால் ஆனது.

## 27. சாரிந்தா - இசைக்கருவி

வட இந்தியாவிலும், தென் இந்தியாவிலும் பயன் படுத்தப்பட்ட ஒரு நரம்புக் கருவி ஆகும். இது மிகப் பழமையானதும் வில் போட்டு வாசிக்கக் கூடியதுமான இந்திய இசைக்கருவி. இதன் ஒலிப் பெட்டி கோளவடிவில் இருக்கும். இதன் உடலைப் பார்த்தால் அது இரு பகுதிகளாக இருப்பது போல் காணப்படும். இதன் கீழ்ப் பகுதி பேரிக்காய் வடிவமானது. இது மட்டுமே தோலினால் போர்த்தப்பட்டிருக்கும். மிகப் பெரிய மேற்பகுதி இறக்கைகள் போன்ற ஒரு வடிவைக் கொண்டது. முழுவதும் திறந்திருக்கும் இப்பாகம் தண்டியின்

தொடர்ச்சியாக அமைந்துள்ளது. இதன்மீது முறுக்கப்பட்ட நான்கு தந்திகள் உள்ளன. இத் தந்திகள் பருத்தி, நரம்பு அல்லது உலோகத்தினால் செய்யப்பட்டிருக்கும். இது சாரங்கி என்ற கருவிக்கு முன் தோன்றியதாக இருக்கலாம். தென் இந்தியாவில் தேவார இசைக்குப் பக்கக் கருவியாக இருந்துள்ளது. திருக்கோயில்களிலும், பக்தி இசை நிகழ்ச்சிகளிலும் பக்கக் கருவியாக வயலினைப் போன்று இசைத்துள்ளனர். புதுக்கோட்டை சமஸ்தானத்தில் சாரிந்தா நாயுடு என்ற இசை மேதை இருந்துள்ளார். வீணை குப்பையர் என்பவர் தியாகராஜரின் வீட்டில் மாலை நேரப் பஜனை நிகழ்ச்சிகளின் போது இதனைப் பக்க வாத்தியமாக இசைத்துள்ளார்.

## 27. சாரிந்தா



The *sarinda* and the *dotara*. Tripura.

## சாரிந்தா - இசைக்கருவி



## 28. தம்புரா

இது ஒரு சுருதிக் கருவி. விரல் கொண்டு மீட்டி வாசிக்கப்படும் நரம்புக் கருவி. சுருதிக் கருவிகளுள் இது தற்போது மிக முக்கியமான கருவியாகக் கருதப்படுகிறது. ‘தும்புரு’ என்ற இசைக்கலைஞர் கையாண்டதால் தம்புரா என்று அழைக்கப்படுகிறது. இதன் சிற்பம் தமிழகத்தில் திருமயத்தில் உள்ள கோயிலில் காணப்படுவதால் இது தென் இந்தியாவில் தோன்றிய கருவி எனலாம். இது ‘கலாவதி’ என்றும் அழைக்கப்பட்டுள்ளது. இது பலா மரத்தால் செய்யப்பட்ட குடம், தண்டி, கழுத்துப் பகுதிகளைக் கொண்டது. குடத்தின் மேற்பகுதியில் குதிரையும், நாதத்துளைகளும் உள்ளன. தந்தித் தாங்கியில் 4 தந்திகள் கட்டப்பட்டுக் குடத்தின் மேல் உள்ள குதிரை வழியாக, தண்டி வழியாக மேல் உள்ள பிரடைகளில் கட்டப்பட்டுள்ளது. குதிரைக்கும் தந்தித் தாங்கிக்கும் இடையே 4 மணிக்காய்கள் சுருதியை நுட்பமாகச் சேர்க்கப் பயன்படுகின்றன. தந்திக்கும் மெட்டிற்கும் இடையே ‘சீவாளி’ எனப்படும் பட்டு நூல் அல்லது கம்பளி நூல் தம்புராவின் நாதத்திற்குச் சீவன் (உயிர்) கொடுக்கிறது. தம்புராவை நின்ற நிலையில் வைத்துக் கொண்டோ அல்லது படுக்கை நிலையில் வைத்துக் கொண்டோ வலது கை ஆள் காட்டி விரல் மற்றும் நடுவிரல் கொண்டு தந்திகளை மீட்டி வாசிக்கப் படுகிறது. தஞ்சாவூர், திருவனந்தபுரம், மைசூர், விஜயநகரம் ஆகிய இடங்களில் தம்புராக்கள் செய்யப்படுகின்றன. காஞ்சிபுரத்தில் மகேந்திரவர்மனின் பேரன் இராஜசிம்மன் கட்டிய கைலாச நாதர் கோயிலில் மூன்று வகையான தம்புராக்கள் காணப்படுகின்றன.

## 29. வீணை

யாழ் பல்வேறு பரிணாம வளர்ச்சிக்குப் பின் வீணையாக வந்துள்ளது. செங்கோட்டு யாழே வீணையின் முன்னோடி என்று கூறப்படுகிறது. தற்போது உள்ள வீணை 17 ஆம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்ட இரகுநாத நாயக்க மன்னரின் (1544 - 1627) காலத்தில் கோவிந்த தீட்சிதர் என்பவரால் 24 மெட்டுக்கள் கொண்டு உருவாக்கப்பட்டது. நரம்புக் கருவிகளில் இது மீட்டி வாசிக்கப்படும் கருவியாகும்.

## வீணை



Sarasvati Veena



The *Sarasvati veena*. South India.

வீணையின் குடம் பலா மரத்தால் செய்யப்பட்டது. இது தண்டியுடன் இணைக்கப்பட்டு மறுமுனையில் யாளிமுகம் இணைக்கப்பட்டுள்ளது. தண்டியின் இரு பக்கங்களிலும் மெழுகுச் சட்டங்கள் உண்டு. இவற்றின்மேல் 24 மெட்டுக்கள் (வெண்கலத்தினால் செய்யப்பட்ட) உள்ளன. யாளி முகத்தின் அருகே ஒரு சுரைக்காய்த் தாங்கி ஒலிபெருக்கியாகவும் பயன்படுகிறது. குடத்தின் மறுபுறம் தந்தித் தாங்கியில் 4 வாசிக்கும் தந்திகளும் 3 தாளத் தந்திகளும் குடத்தின் மேற்புறத்தில் நடுவில் உள்ள குதிரை வழியாக, தண்டி வழியாக

மறு முனையில் உள்ள பிரடைகளில் கட்டப்பட்டிருக்கும். தந்தித் தாங்கிக்கும் குதிரைக்கும் இடையே உள்ள கம்பிச் சுருள்கள், சுருதியை நுட்பமாகச் சேர்க்கப் பயன்படும்.

வீணை வலது கையின் ஆள் காட்டிவிரல், நடுவிரல் ஆகியவை தந்திகளை மீட்டுவதற்கும் இடது கையின் ஆள் காட்டி விரல், நடுவிரல் ஆகியவை மெட்டின் மீது வைத்துச் சுரங்களை வாசிக்கவும் பயன்படுகின்றன. வலது கையின் சுண்டு விரல் தாளத் தந்திகளை மேல் நோக்கி மீட்டுவதற்குப் பயன்படுத்தப்படுகின்றன.

இவ்வீணை தஞ்சாவூரில் செய்யப்படும் பொழுது 'தஞ்சாவூர் வீணை' என்றும், கருநாடகாவில் உள்ள மைசூரில் செய்யப்படும்போது 'மைசூர் வீணை' என்றும், ஆந்திராவில் பொப்பிலி என்ற இடத்தில் செய்யப்படும் போது 'பொப்பிலி வீணை' என்றும் அழைக்கப்படுகின்றது.

தமிழ்நாட்டில் வீணைகுப்பையர், வீணை கிருஷ்ணையர், காரைக்குடி சாம்பசிவ ஐயர், வீணை தனம்மாள் போன்றவர்களும் விஜயநகரம் குருராயசார்யுலு பரம்பரையினரும் வீணை வாசிப்பதில் மிக வல்லவர்கள்.

## 30. கோட்டுவாத்தியம்

கோட்டுவாத்தியம் என்ற இசைக்கருவி தென் இந்தியாவில் தோன்றிய ஒரு நரம்புக் கருவியாகும். 17 ஆம் நூற்றாண்டில் இரகுநாத நாயக்க மன்னன் இயற்றிய நூலில் இதன் பெயர் காணப்படுகிறது. இது 'மகாநாடக வீணை' என்று அழைக்கப்படுகிறது. கோடு எனப்படும் கட்டை, மரத்துண்டு, மரக்குச்சி கொண்டு தந்தியின் மேல் உராய்ந்து இசை எழுப்பப்படுவதால் இது 'கோட்டுவாத்தியம்' எனப் பெயர் பெற்றது. இந்தக் கருவிக்கு முன்னோடி யாழ்தான் என்று அதன் அமைப்பே நமக்குப் புலப்படுத்தும்.

இது மெட்டுக்களும், மெழுகுச்சட்டமும் இல்லாத வீணையின் அமைப்பைக் கொண்டது. பலா மரத்தால் செய்யப் பட்டது. வீணையைப் போன்றே, குடம், தண்டி, குதிரை, யாளி முகம் போன்ற பகுதிகள் கொண்டது. இது 5 வாசிக்கும்

தந்திகளும், மூன்று தாளத் தந்திகளும் மொத்தம் 8 தந்திகள் கொண்டது. இசை தவிர வாசிக்கும் தந்திகளுக்குக் கீழ்த் தண்டியின் உட்புறத்தில் பரிவு ஒலி அதிர்வுத் தந்திகள் உள்ளன.



The getu vadyam. Tamil Nadu



கோட்டு வாத்தியம் (மகாவீணை)
(செங்கோட்டியாழின் வளர்ச்சி நிலை)

இக்கருவியை வாசிப்பவர் தமக்குப் பக்கமாக முன்கோட்டுவாத்தியத்தைத் தரையில் வைத்துக் கொண்டு 4 அங்குல நீளமும் ½ அங்குல விட்டமும் கொண்ட உருளை வடிவமான மரத்துண்டைத் தமது இடது கையில் பிடித்துத் தந்திகளை அழுத்தி, உராய்த்து வலது கையின் ஆள்காட்டி விரல் மற்றும் நடுவிரலால் தந்தியை மீட்டி வாசிப்பார்.

## 31. கெத்து இசைக்கருவி

திருக்கோயில்களில் வாசிக்கப்படும் வாத்தியங்களில் கெத்து என்ற இசைக் கருவி குறிப்பிடத்தக்கது. இது தாளத்திற்காகப் பயன்படுத்தப்படும் ஒரு நரம்புக் கருவி. இது பழைய கருவிகளில் ஜல்லரி என்ற கருவியாக இருக்கலாம் என்று கூறப்படுகிறது. இதன் ஒலி 'ஜல்' 'ஜல்' என்று இருப்பதால் இப்பெயர் பெற்றது. புதுக்கோட்டை மாவட்டத்தில் திருப்பெருந்துறை என்னும் ஆவுடையார் கோயிலில் யோகாம்பிகை சந்நிதியில் தினசரி மாலை நேரப் பூசையின் போது வாசிக்கப்படுகிறது. கி.பி.1600 ஆம் ஆண்டிற்கு உட்பட்ட இராமநாதபுரச் சமஸ்தான ஆவணங்களில் இந்த ஜல்லரி வாசிக்கும் கைங்கர்யம் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. யோகாம்பிகை யோக நிலையில் இருப்பதால் மென்மையான இசையைத் தரும் வீணையும் அதற்குப் பக்கக் கருவியாக இந்தக் கெத்துக் (ஜல்லரி) கருவியும் வாசிக்கப்படுகின்றன. தஞ்சைச் சோழ மன்னர்களும், இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களும் இதற்காக நிலங்களைத் தானமாக வழங்கி உள்ளனர். (மறையும் மரபு - தினமணிகதிர் - 31. 5. 09. பக். 23).

### கருவியின் அமைப்பு

இது வீணையைப் போன்று தோற்றம் உள்ளதாக உள்ளது. கோட்டு வாத்தியம் போல மெட்டுக்கள் இல்லாமல் வாசிப்பவர் தமக்கு முன்னால் சமதரையில் படுக்கவைத்த நிலையில் வைத்துக் கொண்டு வாசிப்பர். வீணையைப் போன்றே ஒரு புறம் குடமும் மறுபுறம் சுரைக்காய்த் தாங்கிக்குப் பதிலாக யாழி முகம் தண்டியிலிருந்து கீழ்நோக்கிச் சென்று தாங்கியாகவும் பின் மேல் நோக்கி யாழிமுகமாகவும் அமைக்கப் பட்டுள்ளது. தண்டியில் மேளங்கள் இல்லை. 4 வெள்ளிக் கம்பிகள் (வெவ்வேறு கன அளவினதாய்) 4 பிரடைகளில் இழுத்துக் கட்டப்பட்டுள்ளன. வீணையைப் போலக் குதிரையில் உள்ள 4 மணிக்காய்கள் துல்லியமாகச் சுருதி

சேர்க்கப் பயன்படுகின்றன. இந்நான்கு தந்திகள் 1. சமன் மண்டிலக் குரல் (மத்யஸ்தாயி ஸட்ஜம்) 2. அதி மெலிவு மண்டிலக் குரல் (அனுமந்திர ஸட்ஜம்) 3. சமன் மண்டில இளி (மத்ய ஸ்தாயி பஞ்சமம்) 4. வலிவு மண்டிலக் குரல் (தாரஸ்தாயி ஸட்ஜம்) அல்லது அதிமெலிவு மண்டில இளி (அனுமந்திர பஞ்சமம்) என்னும் சுரங்களுக்குச் சுருதி கூட்டப்பட்டிருக்கும். இதற்கெனப் பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட சிறிய குச்சிகளைக் கையில் பிடித்துக் கொண்டு கம்பிகளின் மீது தட்டி இதனை வாசிப்பர். இரண்டு குச்சிகளின் அடியிலும் இரண்டு வெங்கல வெண்டயங்கள் பொருத்தப்பட்டுச் சலங்கை ஒலியையும், வெங்கல நாதத்தையும் குச்சிகள் உண்டாக்கும். இடது கைக்குச்சி 25 செ.மீ. நீளமும் கருவியின் மத்தியில் தந்தியின் மேல் தட்டி வாசிப்பதற்கும் வலது கைக் குச்சி 32 செ.மீ. நீளமுடையதாகக் குடத்தின் மேல் உள்ள குதிரையின் அருகில் தட்டி வாசிப்பதற்கும் பயன்படுகின்றன. மிருதங்கத்தில் வாசிக்கப் படும் அனைத்துச் சொற்கட்டுகளும், ஜதிகளும் இந்தக் கெத்துக் கருவியில் தட்டி வாசிக்கலாம். இது ஒரு நரம்புக் கருவியாக இருந்தாலும் வாசிக்கும் முறையில் ஒரு தாளக் கருவியாகவே பயன்படுத்தப்படுகிறது. இதில் தாளச் சொற்கள் தவிரப் பண்ணுடன் கூடிய இசையை வீணையைப் போல வாசிக்க முடியாது.

இக்கருவியைத் தஞ்சைச் சமஸ்தானக் கலைஞர்களான சேசையா, சுப்பையா சகோதார்களும், சுப்பையா, குப்பையா சகோதார்களும், பின் கிருஷ்ண பாகவதர் (1803) அப்பராமையர் (1906), பின் சீதாராமபாகவதர், வீராசாமிஐயர், அரிகரபாகவதர் (1895 - 1976) போன்றோர் வாசித்துள்ளனர்.

## கெத்து இசைக்கருவி





கெத்து வாத்தியம் வாசிக்கும் ஆவுடையார்கோயில் சுப்ரமணியம்

## 32. பாலசரஸ்வதி

இது மயூரி, தாவுஸ் என்றும் அழைக்கப்படுகின்றது. இதன் குடம் மயில் போல இருப்பதால் மயூரி எனப்பெயர் பெற்றுள்ளது. இது வில் போட்டு வாசிக்கும் ஒரு நரம்புக் கருவி. இதில் உள்ள மெட்டுக்கள் அசையும் தன்மை உள்ளவை. இதன் உடம்பும், தண்டியும் மயிலைப் போன்றே வண்ணம் தீட்டப் பட்டிருக்கும். மெட்டுக்களுக்குக் கீழ்ப் பல பரிவு ஒலி அதிர்வுத் தந்திகள் உள்ளன. இவை தந்தத்தினால் ஆன திருகு மூலம் தண்டியுடன் இணைக்கப்பட்டுள்ளன. திருகுகள் தண்டியின் பக்கவாட்டில் உள்ளன. குடத்தின் நடுவில் தந்தத்தால் ஆன குதிரை காணப்படுகிறது. வலது கையினால் வில்லினையும், இடது கையில் ஆள்காட்டி விரலும், நடு விரலும் மெட்டுக்களின் மேல் தடவி வாசிக்கப் பயன்படும். மயிலின் கால்கள் போன்ற பகுதியை உடைய குடம் தரையில் வைக்கப் படும் கழுத்துப் பகுதி இடது தோளில் வைத்தும் வாசிக்கப்படும். தமிழ்நாட்டில் தமிழ் நாடு அரசு இசைக் கல்லூரியில் இக் கருவி காட்சியில் வைக்கப்பட்டுள்ளது. இக்கருவி தற்போது தமிழ்நாட்டில் நடைமுறையில் வாசிக்கப்படுவது இல்லை. இதன் அமைப்பு வாசிக்கும் விதம் சாரங்கியை ஒட்டியே உள்ளது.





## 33. பிரதர்சன வீணை

இக்கருவி பேராசிரியர் பி. சாம்பமூர்த்தியால் கண்டு பிடிக்கப்பட்டதாகும். நரம்புக்கருவிகளின் அதிர்வு விதி முறைகளையும், துல்லிய ஒலிகள், 22 சுருதிகள் பற்றி மாணவர்களுக்குக் கற்றுத்தர உதவும் ஒரு நரம்புக் கருவியாகும். செயல்முறைப் போதனைக்குப் பயன்படுவதோடு கச்சேரிக்கும் பயன்படும். இக்கருவி 5 அடி 4 அங்குல நீளம் உள்ளது. மொத்தம் 40 தந்திகள் கொண்ட கருவியாகும். 4 சுருதி

கொடுக்கும் தம்புரா தந்திகள், 5 வாசிக்கும் தந்திகள், 3 தாளத் தந்திகள், 7 துருவ வீணைத் தந்திகள், 7 சலவீணைத் தந்திகள், 14 பரிவு ஒலி அதிர்வுத் தந்திகள் என 40 தந்திகள் கொண்டது. இக்கருவியின் வழி கிரஹ பேதம் செய்து காட்டலாம். இக்கருவி சென்னைப் பல்கலைக்கழகத்தில் இசைத் துறையில் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது.

# 4. நரம்புக் கருவிகளின் வகைகள்

நரம்பை மீட்டி இசை உண்டாக்கும் கருவிகள் நரம்புக் கருவிகள் எனலாம். இக்கருவிகளில் பயன்படுத்தப்பட்ட நரம்பு என்ற இசை உண்டாக்கப் பயன்படுத்தப்பட்ட பாகம் அக்காலம் முதல் இன்று வரை பல பொருள்களால் ஆகியுள்ளது. அவை கயிறு, குடல், குடல் நாண், குடல் நரம்பு, முறுக்கப்பட்ட பருத்தி இழை, மூங்கில் இழை, சணல், மரநார், குதிரைமுடி, உலோகம் (பித்தளை, எஃகு, செப்பு, வெள்ளி) இக் கருவிகளின் அமைப்பைப் பொறுத்தும், பயன்படுத்தும் விதம், வாசிக்கும் விதம், கருவியில் உள்ள நரம்புகளின் எண்ணிக் கையைப் பொறுத்தும் பல வகைகளாகப் பிரிக்கலாம்.

## I. கருவியை வாசிக்கும் விதத்தில் வகைப்படுத்துதல்

**1. மீட்டி வாசிக்கப்படுபவை :** வலதுகையில் நரம்பை மீட்டியும், இடது கையால் மெட்டுக்கள் மீது தடவியும் வாசிக்கும் கருவிகள் - வீணை. மீட்டுதல் மேல் நோக்கி மீட்டியும் கீழ் நோக்கி மீட்டியும் வாசிக்கப்படுகிறது. வீணையில் வாசிக்கும் தந்திகளில் கீழ் நோக்கி மீட்டியும், தாளத் தந்திகளை மேல்நோக்கி மீட்டியும் வாசிக்கப்படுகிறது.

**2. வில்போட்டு வாசிக்கப்படுபவை :** கருவியில் உள்ள நரம்புகளின் மேல் வில் கொண்டு வாசிக்கப்படும் கருவிகள் - சாரங்கி, சரிந்தா, பாலசரஸ்வதி. வில் போட்டு வாசிக்கும்போது விரல் பலகையில் மெட்டுக்களுடன் வாசிக்கப்படுபவை - பாலசரஸ்வதி.

**3. விரல் பலகையின் மேல் உருளை அல்லது கோடு அல்லது குச்சி கொண்டு வாசிக்கும் கருவிகள்**

1. கெத்து, கோட்டு வாத்தியம்
2. சில்லைக் கொண்டு மீட்டி வாசிக்கப்பட்ட கருவிகள் - விபஞ்சி வீணை

3. உலர்ந்த தோல் கொண்டு மீட்டி வாசிக்கப்படுபவை - நிசங்க வீணை

4. மூங்கில் சில்லை வைத்துத் தேய்த்தும் வாசிக்கப் பட்டுள்ளன.

**4.** 1. கருவியைப் படுக்கை நிலையில் வைத்து வாசிக்கப் பட்டவை - வீணை, கோட்டு வாத்தியம்

2. கருவியை நேராகச் செங்குத்து நிலையில் வைத்து வாசிக்கப்பட்டவை - ருத்திரவீணை, பாலசரஸ்வதி

## II. கருவியின் அமைப்பைக் கொண்டு, வகைகள்

1. தண்டியில் மெட்டுக்களுடன் கூடியவை - வீணை

2. தண்டியில் மெட்டுக்கள் இல்லாதவை - கோட்டு வாத்தியம்

3. ஒரு குடம் (இசை ஒலிபெருக்கி) கொண்டவை - துந்தினா, தம்புரா

4. இரண்டு குடம் (இசை ஒலி பெருக்கி) கொண்டவை வீணை, கோட்டுவாத்தியம்.

5. மூன்று குடம் (இசை ஒலி பெருக்கி) கொண்டவை கின்னரி

6. ஒலி பெருக்கிப் பெட்டி வடிவம் கொண்டவை சுரமண்டலி, சந்தூர்

7. நீண்ட கழுத்து அல்லது தண்டி கொண்டவை .தம்புரா, துந்தினா

8. நீண்ட கழுத்து அல்லது தண்டி இல்லாதவை - யாழ், சாரங்கி, சரிந்தா, சுரமண்டலி

9. வாசிக்கும் தந்திகளுடன் பரிவுஒலி அதிர்வுத் தந்திகள் கொண்டவை - கோட்டு வாத்தியம், சாரங்கி

## III. பயன்படுத்தும் வழி நரம்புக் கருவிகளின் வகைகள்

1. சுருதிக்காக மட்டும் வாசிக்கப்படுபவை - துந்தினா, தம்புரா
2. தாளத்திற்காக மட்டும் வாசிக்கப்படுபவை - கெத்து வாத்தியம்
3. பாட்டு மற்றும் பண் வாசிக்கப்படுபவை - வீணை, சாரங்கி
4. நாடோடி இசையிலும், பக்தி இசையிலும் பயன் படுத்தப்பட்டவை - துந்தினா

## IV. கருவியில் உள்ள நரம்புகளின் எண்ணிக்கை கொண்டு, வகைகள்

1. ஒரு நரம்புக் கொண்ட கருவி - துந்தினா
2. மூன்று நரம்புகள் கொண்ட கருவி - கின்னரி, நந்துனி
3. நான்கு நரம்புகள் கொண்ட கருவி - தம்புரா
4. ஐந்து நரம்புகள் கொண்ட கருவி - விபஞ்சிவீணை
5. ஆறு நரம்புகள் கொண்ட கருவி - விசித்திரவீணை
6. ஏழு நரம்புகள் கொண்ட கருவி - வீணை செங்கோட்டு யாழ் -
7. எட்டு நரம்புகள் கொண்ட கருவி - கோட்டு வாத்தியம், வில்யாழ்.
8. பதினாறு நரம்புகள் கொண்ட கருவி - சகோடயாழ்
9. பதினேழு நரம்புகள் கொண்ட கருவி - மகரயாழ்
10. இருபத்தொரு நரம்புகள் கொண்ட கருவி- பேரியாழ்.
11. நாற்பது தந்தி கொண்ட கருவி - பிரதர்சன வீணை
12. நூறு தந்திகள் கொண்ட கருவி - சந்தூர், சததந்திரி சுரமண்டலி
13. ஆயிரம் நரம்புகள் கொண்டது - ஆதியாழ்.

# 5. நரம்புக் கருவிகளின் படிநிலை வளர்ச்சி - நாடு முழுமைக்கும் ஒரு பார்வை

வகையிலும், தொகையிலும் நரம்புக் கருவிகள் ஏராளமாக இருப்பதால் அவற்றின் தோற்றுவாயை ஆராய்வதும், அவற்றை வகைப்படுத்துவதும், அது நாடு முழுதும் பரவிய விதத்தை ஆராய்வதும் மிகப் பெரிய பணியே. ஆனாலும் அவற்றின் அமைப்பை நோக்கும் போது அவற்றின் பெயர் மட்டுமே மாநிலங்களுக்கு மாநிலம் மாறியுள்ளதை அறிகிறோம். இவ்வாறு நாடு முழுதும் காணப்படும் ஒரே அமைப்பை உடைய சில கருவிகளை இங்குக் காணலாம்.

சுருதி வகையைச் சேர்ந்த கருவிகளுக்கு ஒரு பொது உதாரணம் என்று எடுத்துக் கொண்டால் அது துந்தினா என்று அழைக்கப்படும் கருவியாகும். இது தென் இந்தியாவில் தமிழ்நாட்டில் தோன்றிய நரம்புக் கருவியாகும். இது தென், மத்திய, மேற்கு இந்தியாவில் காணப்படும் ஒரு நரம்புக்கருவி. இது ஆண்டிகள் எனப்படும் நாடோடிகளுடன் இணை பிரியாத ஒரு கருவியாகும். இதன் உடல் மிகச் சிறியது. சுமார் 25 செ.மீ. உயரமும், 15 முதல் 20 சென்டி மீட்டர் சுற்றளவும் உள்ள ஒரு மர உருளை இதன் ஒரு பாகம். இதன் கீழ்ப்பகுதி தோலினால் மூடப்பட்டிருக்கும். இதன் வெளிப்புறத்தில் சுமார் 25 சென்டிமீட்டர் நீளமுள்ள மூங்கில் துண்டைப் பொருத்தித் திருகாணிகளால் முடுக்கி இருப்பார்கள். இதன் மேல் முனையில் ஒரு முளையைச் சொருகி, அதிலிருந்து உருளையின் அடிவரையில் ஒரு கயிற்றைக் கட்டி இருப்பார்கள். முளையைத் திருகுவதன் மூலம் இக்கயிற்றை இறுக்கவோ, தளர்த்தவோ முடியும். பாடுபவர் இதை ஒரு கையில் பிடித்துக் கொண்டு மற்றொரு கையின் ஆள் காட்டி விரலினால் கயிற்றை மீட்டி ஆதாரச் சுருதியுடன் கூடிய தாளத்தை இசைப்பார்.

மகாராஷ்டிரா மாநிலத்தில் தமாஷா என்ற நாடகத்தின் பொழுதும், போ வாடா என்ற நாடோடிக் கதைப் பாடலுடனும் துந்துனே சாதாரணமாக வாசிக்கப்படுகிறது. இதனுடன் நெருங்கிய தொடர்புடைய மற்றொரு கருவி ஒரிஸ்ஸா, வங்காளம் ஆகிய மாநிலங்களில் காணப்படும் கோபியந்திரம் அல்லது ஏக்தார். இது ஊர் ஊராகப் பாடிக் கொண்டு திரியும் பக்கிரிகளின் கையில் எப்பொழுதும் காணப்படும்.

## துந்தினா



இது வைணவப் பக்தி மார்க்கத்தையும் ஸுஃபிகளின் மதத்தையும் பரப்பப் பயன்படுத்தும் ஒரு கருவி. துந்தினாவைப் போலக் கோபியந்திரத்திலும் அடியில் தோலினால் மூடப்பட்ட ஒரு மரக்குவளை (இசை ஒலிபெருக்கி) உள்ளது.

ஆனால் இந்த இசை ஒலிபெருக்கி அடியில் அகன்றும் மறுபுறம் குறுகியும் உள்ளது. துந்தினா போலக் கயிற்றை முளையடித்த மூங்கிலில் கட்டுவதில்லை. கிளைகளாகப் பிரிந்த ஒரு மூங்கிலைக் கருவியின் வெளிப்புறத்தில் ஆணியடித்துப் பொருத்தி அதில் கயிற்றைக் கட்டுவார்கள். கயிறு இதன் உச்சியிலிருந்து பிளவு பட்ட மூங்கில் வழியாகச் சென்று இசை ஒலிபெருக்கியின் அடியில் கட்டப்படும். இசை ஒலிபெருக்கியை ஒரு கையினடியில் வைத்துக் கொண்டு பிளந்த முங்கிலை உள்ளங்கையில் பிடித்துக் கொள்வார்கள். கயிற்றை ஒரு குச்சியினால் மீட்டும் பொழுது பிளந்த மூங்கிலை மற்றொரு கையினால் தேவையானபடி அமுக்குவார்கள். அப்பொழுது கயிற்றின் விசை மாறுவதால் கருவியின் சுருதியும் ஒலியின் தரமும் மாறும்.

இக்கருவி ஹிந்தியில் பிரேம்தால் என்றும் வங்காளியில் கமக் என்றும், மராட்டியில் சோங்கா என்றும் தெலுங்கில் ஜிமிடிக்கா என்றும் அழைக்கப்படும். கருவிகள் துந்தினாவை ஒத்தவையே என்றாலும் அமைப்பில் சில வேறுபாடுகள் கொண்டவை. பிரேம்தால் என்ற கருவி முக்கியமாகத் தாளத்திற்காக உபயோகிக்கப்படுகின்றது. இதில் காய்ந்த சுரைக்காயோ அல்லது மரத்தால் ஆன குடமோ ஒலி பெருக்கியாக அமைக்கப்பட்டிருக்கும். துந்தினா போல இதன் கீழ்ப் பகுதி தோலினால் மூடப்பட்டிருக்கும். ஒலிபெருக்கியின் மூலமாகச் சுமார் 60 சென்டிமீட்டர் நீளமுள்ள நரம்பாலான ஒரு கயிறு கட்டப்பட்டிருக்கும் இதில் ஒரு கழியோ பிளவுபட்ட மூங்கிலோ கிடையாது. வாசிப்பவர் இதைக் கையினடியில் வைத்துக் கொண்டு கயிற்றின் நுனியை அதே கையின் விரலால் பிடித்துக் கொள்வார். அதில் கட்டியுள்ள ஒரு சிறு மரத்துண்டின் மூலம் நூலை இழுத்துப் பிடித்துக் கொள்வார். மற்றொரு குச்சியைக் கொண்டு நூலை மீட்டுவார். மீட்டும் போது பார்ப்போர் காணாத வண்ணம் கயிற்றை அடிக்கடி இழுப்பார். இதன் மூலம் நல்ல ஒரு ஒலி தோன்றும். இதே போன்ற கருவி ஜிமிடிக்கா என்பது, ஆந்திர மாநிலத்தில் பயன்படுத்தப்படுவது. பாம்பாட்டிகளாலும், நாடோடிப் பாடகர்களாலும் பயன்படுத்தப்படுகிறது.

**பிரேம் தால்**



**ஜிமிடிக்கா**



ஒரிஸ்ஸாவில் ஸந்தால் என்ற சாதி இனத்தினரால் பயன்படுத்தப்படும் மற்றொரு நரம்புக் கருவி புவாங் என்பது. இதுவும் ஒரே ஒரு நரம்புக் கொண்ட சுருதிக் கருவியே. இதன் அளவு பல வகைப்பட்டதாக உள்ளது. எனினும் சாதாரணமாக ஒரு மீட்டர் நீளம் இருக்கும். இது ஒரு மூங்கில் குழாய், ஒலி பெருக்கும் சாதனம், ஒரு கயிறு ஆகியவை கொண்டது. இதன்

ஒலிபெருக்கி காகிதம் ஒட்டப்பட்ட ஒரு முட்டை வடிவமான மூங்கில் கூடையாகும். பழைய செய்தித் தாள்கள் முதல் அழகிய வண்ணக் காகிதம் வரை எதை வேண்டுமானாலும் கத்தரித்து ஒட்டுவார்கள். இதன் மூலம் கூடையின் ஒலி பெருக்கும் சக்தி அதிகரிப்பதுடன், பார்வைக்கும் அது அழகாக இருக்கும். இது மூங்கில் குழாயின் அடியில் மத்திய பாகத்தில் கட்டப் பட்டிருக்கும். குழாயின் திறந்த இரு புறங்களிலும் சில சென்டி மீட்டர் நீளம் உள்ள வளைந்த மரக் கொம்புகள் செருகப்படும். இக் கொம்புகளுக்கிடையே சணல் கயிற்றை இழுத்துக் கட்டுவார்கள். அவர்கள் கூட்டமாக நடனம் புரியும் பொழுது. இரண்டு அல்லது அதற்கும் அதிகமான புவாங் கருவிகள் வாசிக்கப்படும். நாட்டியம் ஆடுபவர் குழாயை ஒரு கையில் பிடித்துக் கொண்டு மற்றொரு கையினால் கயிற்றை இழுத்து விடும் போது நல்ல ஒலி பிறக்கும். இது மிகவும் பழங்காலக் கருவி. இதிலிருந்துதான் மரத்தால் ஆன குடம், சுரைக்காய் முதலியவை கொண்ட கருவிகள் தோன்றி இருக்கக்கூடும். இக் கருவியில் கட்டை மூங்கில் கழியின் அடிப்பகுதியில் வருவதால் இத்தகைய அமைப்பிலிருந்து ருத்திரவீணை, விசித்திர வீணை போன்ற கருவிகள் தோன்றி இருக்கலாம். புவாங் கருவியின் அமைப்பு நம் பழங்காலத் தமிழர் வில் யாழை ஒத்து உள்ளது.

## புவாங்



புவாங்

ஏக்தார் என்பது வட இந்தியாவில் பயன்படுத்தப்பட்ட ஒரே நரம்புக் கொண்ட ஒரு சுருதிக் கருவி. இதைப் பக்த மீரா, துளசிதாசர் போன்றோர் பயன்படுத்திப் பக்தி நெறியை வளர்த்துள்ளனர். 'ஏக்' என்பது வட மொழியில் ஒன்று என்பதைக் .குறிக்கும். 'தர்' என்பது நரம்பு அல்லது கயிறு. "ஒரு நரம்பு"க் கொண்ட கருவி ஆதலால் அது ஏக்தார் என அழைக்கப்பட்டுள்ளது.

## ஏக்தார்



ஏக்தார் என்ற ஒற்றை நரம்புக்கருவியின் ஒலி பெருக்கி ஒரு தட்டையான காய்ந்த பரங்கிக்காய் ஆகும். ஒரு வெற்று மூங்கில் கழி இதனுள் செருகப்படும். இதன் அமைப்பு துந்தினாவை ஒத்ததே. தோல் கட்டப்பட்ட மர உருளைக்குப் பதிலாகப் பரங்கிக்காயைப் பயன்படுத்தி உள்ளனர். ஆனால் இந்த அமைப்பே பின்னால் சித்தார், சரஸ்வதி வீணை, சரோத் தோன்றக் காரணமாக இருந்துள்ளது. ஏக்தாரில் மூங்கில் கம்பு பரங்கிக் காய்க்குள் நுழைந்து மறுபுறம் சிறிது நீட்டிக் கொண்டிருக்கும். இதில் இருக்கும் ஒரு சிறு கொக்கியில் கட்டப் பட்டுள்ள உலோகக் கம்பி பரங்கிக் காயின் மேல் சென்று கழியின் நுனியில் உள்ள ஒரு முளையின் மீது சுற்றப்படும். இக் கம்பியின் அடியில் பரங்கிக்காயின் மீது குதிரை எனப்படும் ஒரு

கட்டை வைக்கப்படும். ஆள்காட்டி விரலால் இக்கருவியின் கம்பி முன்னும் பின்னுமாக மீட்டப்படும். இக்கருவி ஆண்டிகளுக்கும், பஜனை பாடுவோருக்கும் தோழனாக உள்ளது. கோபியந்திரமும் ஒரே ஒரு நரம்புக் கொண்ட கருவியாக உள்ளதால் அதுவும் 'ஏக்தார்' என்றே அழைக்கப் படுகிறது. குஜராத்தில் காணப்படும் சுருதிக் கருவியான ராம்சாகர் என்ற கருவியும் இது போன்றதே. என்றாலும், அது இரண்டு தந்திகள் கொண்டதாக உள்ளது. எனவே சுருதிக் கருவிகள் ஒரு நரம்பிலிருந்து இரண்டு, மூன்று, நான்கு என்று பல நரம்புகள் கொண்ட கருவிகள் தோன்றியுள்ளன.

அடுத்து வளர்ச்சி அடைந்த கருவியாகத் தென்னிந்தியப் பரதேசிகள் பயன்படுத்தும் தம்பூரி என்ற கருவியைக் கூறலாம். இது சுமார் ஒரு மீட்டர் நீளமுள்ளது. சுலபமாக எடுத்துச் செல்லக் கூடியது. இதன் ஒலிபெருக்கி மரத்தால் ஆனது. கோள வடிவில் உள்ள இதன் மீது தட்டையான ஒரு மரப்பலகை பொருத்தப்பட்டுள்ளது. இதன் வெற்று உடலில் கழுத்தைப் போல ஒரு கோல் நீண்டிருக்கும். இதன் நுனியில் பாம்பின் படம் வரையப்பட்ட ஒரு காகிதச் சுருள் இருக்கும். மர ஒலிபெருக்கியிலிருந்து நான்கு உலோகக் கம்பிகளைக் குதிரை மீது (வழியாக) காகிதச் சுருக்கு அருகில் உள்ள முளைகளில் கட்டிவிடுவார்கள். பாடுபவர் இக்கம்பிகளை விடாமல் மீட்டிக் கொண்டு பாடுவர்.

தம்பூரி



The *tamburi*. Karnataka and Andhra.

இது ஆந்திரப் பிரதேசத்திலும், மைசூரிலும் காணப்பட்ட ஒரு கருவி. நான்கு நரம்புகள் கொண்ட இக்கருவி 'சிக்க வீணை' என்று பின்னால் அழைக்கப்பட்டுள்ளது. இது நான்கு தந்திகள் (நரம்புகள்) கொண்டதால் 'சா தார்' என்று அழைக்கப்பட்டுள்ளது.

இதில் உள்ள நான்கு தந்திகளும் சேர்ந்து ஒலிக்கும் போது நல்ல நாதம் எழுகிறது. பழங்காலத்து நாடோடிச் சுருதிக் கருவிகளிலிருந்து படிப்படியாக வளர்ச்சி பெற்றுத் தம்புரா தனது முழு வடிவத்தைப் பெற்றுள்ளது எனலாம். தென் இந்தியத் தம்புராக்களின் இசை ஒலிபெருக்கி மரத்தால் ஆகிய குடம். வட இந்தியாவில் பெரிய பரங்கிக்காய் பயன்படுத்தப் படுகிறது. தம்புராவில் பாட்டு வாசிக்க முடியாது. இதில் உள்ள குதிரை, தந்தம், மான் கொம்பு கனமான மரத்தால் செய்யப்பட்டுப் பிரத்தியேக வளைவுடன் இருக்கும். குதிரைகளுக்கும், தந்திகளுக்கும் இடையே உள்ள கம்பளி நூல் அல்லது பட்டு நூல் 'சீவாளி' என்று அழைக்கப்படும். சரியான இடத்தில் பொருத்தினால்தான் சிறந்த ஒலி உண்டாகும். பழங்காலத்திலிருந்து இது பயன்படுத்தப்பட்டுள்ளது. பழங்காலத்தில் அது ஒரு மூங்கில் துண்டாக இருந்துள்ளது.

**சுருதிக் கருவிகள்**

**காஷ்மீரைச் சேர்ந்த ஒற்றை நரம்புக் கருவி**



## வங்காள மாநில ஒற்றை நரம்புக் கருவி



The *gopi yantra*. Bengal.

## வடமாநிலத்து இரட்டை நரம்புக் கருவி



## ஆந்திர மாநிலத்தில் சில்லைக் கொண்டு வாசிக்கப்படும் கருவி



The *ruva brain* Andhra

தமிழ் நாட்டிலும், கேரளாவிலும் காணப்படும் ‘வில்லடி வாத்தியம்’ வில்லைப் போன்ற உருவமுடைய இசைக் கருவிக்கு ஒரு சிறந்த உதாரணமாகும். இதன் பெயரிலிருந்தே அதன் வடிவம் நமக்கு விளங்கும். தமிழில் இதற்கு ‘அடிக்கப்படும் ஒரு வில்’ என்று பொருள். இது ஒரு மிக எளிய கருவி. சுமார் இரண்டு அல்லது மூன்று மீட்டர் நீளமுள்ள வில்லினால் அமைந்தது. அதன் நாண் சணல் கயிறு அல்லது தோலினால் ஆனது. இதை வாய் திறந்த ஒரு மண் பானை மீது வைத்து வாசிக்கும் போது பானை ஒலிபெருக்கியாக அமைகிறது. இதை அடிப்படைக் கருவியாகக் கொண்டு பின்னால் பல நாண்கள் கட்டப்பட்டு, பல இசை ஒலிபெருக்கிகள் சேர்க்கப்படும். அனைத்துக் கருவிகளும் உருவாக ஆதாரமாக உள்ளது இக்கருவி எனலாம்.

## வில்லடி வாத்தியம்



வில்லடி வாத்தியம்

நரம்புக் கருவிகளில் பெட்டி வடிவக் கருவி என்று எடுத்துக்கொண்டால் அதுவும் யாழ் வகையில் காணப்படுகிறது. இக்கருவி கழுத்து மற்றும் தண்டி என்ற பகுதி இல்லாதது. நரம்புகள் ஒரு மரப்பெட்டியின் மீது இழுத்துக் கட்டப்பட்டு உள்ளன. அப்பெட்டியே அவற்றிற்கு இசை ஒலிபெருக்கியாகவும், ஆதாரமாகவும் உள்ளன. இக்கருவிகளில் நரம்புகளின் எண்ணிக்கை அதிகமாக உள்ளது. தமிழ்நாட்டில் காணப்படும் ஸ்வரமண்டலி இவ்வகை நரம்புக் கருவியே. காஷ்மீர் மாநிலத்தில் பயன்படுத்தப்படும் சந்தூர் என்ற கருவியும் இவ்வகையைச் சார்ந்ததே. இக்கருவியில் ஒரு சுரத்திற்கு ஒரு தந்தி உள்ளது. இத் தந்தி ஸ்வர மண்டலத்தின் விளிம்புகள் மேல் சென்று முனைகளில் கட்டப் பட்டிருக்கும். இக் கருவி பழங்கால யாழில் ஒரு நரம்பு ஒரு சுரம் என்ற நிலையில் இருந்ததை நமக்கு நினைவுபடுத்துகிறது. ஆயிரம் நரம்புகள் கொண்ட ஆதியாழ் இக்கருவிக்கு முன்னோடி யாகவோ எண்ணற்ற நரம்புகள் கொண்ட கருவிகள் இக் கருவிக்கு முன்னோடியாகவோ இருந்திருக்கலாம்.

சந்தூர்



The *santur*. Kashmir.

ஒரிஸ்ஸா மாநிலத்தில் வழங்கும் துயிலா என்ற கருவி மிகப் பழமையான கருவி. இதன் உடல் ஒரு நெடிய மூங்கில் கழி. இதில் ஒரு நரம்பை இழுத்துக் கட்டுவார்கள். இதில் குதிரையோ, பிரடையோ, விளிம்போ, இல்லை. துயிலாவின்

மேல் நுனியின் கீழ்ப்பாதியாக நறுக்கப்பட்ட பீர்க்கங்காயைப் பொருத்துவார்கள். அந்தக் குடுக்கையை மார்பின் மீது வைத்து வாசிப்பார்கள் ஒரு கையால் தந்தியின் கீழ்ப் பாகத்தை மீட்டி மற்றொரு கையால் மேல் பாகத்தில் நாதத்தை நிறுத்திப் பயன்படுத்துவர். இக்கருவியை வாசிக்க விரல்களே பயன் படுத்தப்படுகின்றன. விரல்களை மேலும் கீழும் அசைக்காமலே சப்த சுரங்களையும் ஒலிக்கச் செய்கின்றார்கள். இக்கருவியை மீட்டும் விதம், நாதத்தை நிறுத்தும் விதம் போன்றவை பிற்கால வீணை இசைக்கருவிக்கு முன்னோடியாகத் தோன்றுகின்றன. சிற்பங்களில் காணப்படும் ஆலாபினி என்ற வீணை இக் கருவி போல் உள்ளது. மார்பின் மீது குறுக்காக வைத்துக் கொண்டு ஒரு கையினால் நரம்பை மீட்டியும், மற்றொரு கையினால் ஒரு மூங்கில் துண்டைத் தந்தியின் மீது அழுத்தித் தேய்த்தும் கருவியை இசைப்பார்கள். மார்பின் மீது குறுக்காக வைத்துக் கொண்டு வாசிக்கும் வழக்கம் இன்றும் ருத்திர வீணை வாசிக்கப் பின் பற்றப்படுகிறது. நரம்பின் மீது தேய்த்து வாசிக்கும் வழக்கம் விசித்திர வீணையிலும், கோட்டு வாத்தியத்திலும் காணப்படுகிறது.

## துயிலா



துயிலா



The *tuila*. Orissa.

## விசித்திர வீணை



விசித்திர வீணை, கோட்டு வாத்தியத்தில் மெட்டுக்களைப் பொருத்தினால் மற்றொரு வகை வீணை கிடைக்கிறது. இதன் வழி கிடைப்பது கின்னரியும் ருத்திர வீணையுமே. மீட்டிவாசிக்கப் பட்ட பழங்கால இசைக்கருவிகளில் கின்னரி மிக முக்கியமானது. கின்னரி என்ற கருவி பற்றிக் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் செய்திகள் காணப்படுகின்றன. இதில் இரண்டு குடங்கள், மெட்டுக்கள் கொண்ட கின்னரியும், மூன்று குடங்கள், மெட்டுக்கள் கொண்ட நீண்ட சுரப்பலகையும் கொண்ட கின்னரியும் காணப்படுகின்றன.

## ஆதிவாசி கின்னரி



பிற்காலத்து வீணைகள் அனைத்துமே கின்னரியின் வகையைச் சார்ந்தவை. மெட்டுக்கள் இன்றிக் குட்டையான கழுத்தை உடைய யாழ்கள் நமது நாட்டில் மிகப் பழமையானவை. இடைக்கால நூல்களிலும், சிற்பங்களிலும், ஓவியங்களிலும் காணப்படும் ஒரு வகை நரம்புக்கருவி கச்சபி வீணை. கச்சபம் என்றால் ஆமை இதன் உடல் பகுதி ஆமைபோல இருந்ததால்

இப்பெயர் ஏற்பட்டு இருக்கலாம். இதன் குடைந்த வயிற்றின்மேல் தோலைப் போர்த்தி உள்ளார்கள். இதன் உடல் நீண்டு குட்டையான சுரப்பலகையுடன் இணையும். தோல் போர்வையின் மீது பிறைச்சந்திரன் போன்ற குதிரைகளைப் பொருத்தி அதன்மேல் 5 தந்திகள் தண்டின் மறு நுனியில் உள்ள பிரடையில் கட்டப்பட்டிருக்கும். இந்த வீணை மெட்டுக்கள் கொண்டதாக அஜந்தா, கருநாடகத்தில் உள்ள பட்டடக்கல் (5 வது முதல் 7 வது நூற்றாண்டு) முதலிய இடங்களில் மட்டுமே காணப்படுகிறது. இக்கருவியுடன் நெருங்கிய தொடர்புள்ளதாக வட இந்தியப் ரபாப் சரோத் என்னும் கருவிகள் உள்ளன.

## வீணை வளர்ச்சி



தற்கால வயலின் போல வில் போட்டு வாசிக்கும் ஒரு கருவி இல்லாத இடமே இல்லை எனலாம். ஒரு கொட்டாங் குச்சியையோ, மரக்கட்டையோ ஒலிப்பெட்டியாக உடைய இத்தகைய கருவி வாசிப்பவரின் தோள் மீது அணைத்துக் கொள்ளப்படும். இதன் ஸ்வரப் பலகை அவருடைய கையின் நுனி வரை நீண்டிருக்கும். வில்லை ஒரு கையின் உள்ளங்கை யினடியில் பிடித்துக் கொண்டு மற்றொரு கையின் விரல் நுனிகளால் தந்திகளை வாசிப்பர். இவ்வகைக் கருவிகள் தமிழ் நாட்டில் கொட்டாங்கச்சி வயலின், அகப்பைக் கின்னரி,

சிரட்டைக் கின்னரி என்றும் ஆந்திரா, மகாராஷ்ட்டிர மாநிலங்களில் கிங்கிரி என்றும், மேற்கு இந்தியாவில் இராவணஹட்ட என்றும், கேரள நாட்டில் பள்ளுவர்களுக் கிடையே வீணைக் குஞ்சு என்றும், மணிப்பூரில் பேநா என்றும் ஒரிஸ்ஸாவில் பாணம் என்றும் பல்வேறு பெயர்களில் வழங்கப்பட்டுள்ளது.

**(ஆந்திரா மாநிலம்)**
**கிங்கரி - வில் நரம்புக் கருவி**



47. பிரதான்களின் கிங்கிர்

இதனுடன் தொடர்புடைய மற்றொரு கருவி ஸ்வரபத் என்பது. தென்னிந்தியாவில் தியாகராஜரின் சீடர் கிருஷ்ண பாகவதர் அவர்கள் இக்கருவியை வாசிப்பது போலப் படங்கள் உள்ளன. தமிழ் நாட்டில் புதுக்கோட்டையில் உள்ள அருங்காட்சியகத்தில் இதன் ஓவியங்கள் காணப்படுகின்றன.

பின் நீண்ட கழுத்தை (தண்டி) உடைய மெட்டுக்கள் இல்லாத வீணைகள் தோன்றின. இதில் முக்கியமானது கோட்டு வாத்தியமாகும். இதற்கு மகா நாடக வீணை என்ற பெயரும் உண்டு. பின் மெட்டுக்கள் உள்ள வீணை என்று எடுத்துக் கொண்டால் தென்னிந்திய வீணை சரஸ்வதி வீணை என்றும், வட இந்திய வீணை ருத்திரவீணை என்றும் கூறப்படுகிறது. சரஸ்வதி வீணையின் முக்கியத்துவத்தைத்

தென் இந்தியாவில் சித்தார் என்ற நரம்புக் கருவியும் பெற்றுள்ளது. (வீணை - படம்)

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட இந்திய இசை நூல்களிலேயே வில் வாத்தியங்கள் பற்றிய குறிப்புகள் காணப் படுகின்றன. பழங்குடி மக்களிடையே வழங்கிய வயலின் போன்ற கருவிகளின் சிற்பங்கள் பத்தாம் நூற்றாண்டிலிருந்தே காணப் படுகின்றன. ஆந்திரத் தேசத்தில் விஜயவாடாவிலும், மைசூருக்கு அருகில் ஆரகேசுவரின் ஆலயத்திலும் காணப்படுகின்றன. ஸரிந்தா போன்ற கருவிகள் வங்க நாட்டில் விஷ்ணுபுரத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. மேற்கு இந்தியாவில் சாரங்கியைப் போன்ற சிற்பங்கள் காணப்படுகின்றன.

**கேரள மாநிலத்தின் வில்லுக்கொட்டு என்ற கருவி. இது வில்போன்ற தோற்றம் உடையதாய்க் கையில் ஒரு குச்சி வைத்து வாசிக்கப்படுகிறது.**



The *villu kottu*. Kerala.

**மணிப்பூர் மாநிலத்தின் பேனா என்ற வில் போட்டு வாசிக்கும் கருவி. தமிழ் நாட்டின் அகப்பைக் கின்னரி, கொட்டாங்கச்சி வயலின் போன்ற தோற்றமுடைய நரம்புக் கருவியாகும்.**



கிங்கிரி என்ற பெயரே கின்னரி என்பதிலிருந்து தோன்றியது எனலாம். கிண்ணம் போன்ற அமைப்பை (தேங்காய் ஓட்டை)க் குடமாக, இசை ஒலிபெருக்கியாகக் கொள்வதால் இப்பெயர் ஏற்பட்டு இருக்கலாம். மணிப்பூரின் பேனா, ஒரிஸ்ஸாவின் பாணம் முதலியவை வில், அம்புகளுடன் தொடர்புடைய பெயர்கள். வில்லிலிருந்து தோன்றியதால் இப்பெயர் ஏற்பட்டிருக்க வாய்ப்புண்டு.

**பாணம் (ஒரிஸ்ஸா)**



பாணம்

# இராவண ஹட்ட என்ற வில் நரம்புக் கருவி (இராஜஸ்தான் மாநிலம்)



The *Ravana hatta*. Rajasthan.

இராவண ஹட்ட என்பது குஜராத், இராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் காணப்படும் ஒரு வில் இசைக்கருவி. மிகப் பழங்காலத்து வில் கருவியாக உள்ளது. தற்கால வயலின் என்ற கருவிக்கு முக்கிய இணைப்பாக உள்ளது. இன்றும் மேற்கு இந்தியாவில் அதிமாகப் பயன்படுத்தப்பட்ட ஒரு கருவியாகும். பாதியாக அறுக்கப்பட்ட தேங்காய் ஒடே இதன் இசை ஒலிபெருக்கி. இது தோலினால் மூடப்பட்டுள்ளது. இதிலும் ஒரு மூங்கிலைத் தண்டியாகப் பொருத்தியிருப்பார்கள். இதில் உள்ள பிரதானத் தந்திகளில் ஒன்று உலோகக் கம்பி, மற்றொன்று முறுக்கிய குதிரை உரோமம். தவிர, பரிவு ஒலித் தந்தியும் உண்டு. ஒரு நீண்ட வில்லும் இதற்கு உண்டு. இதில் மணிகள் கட்டப்பட்டிருக்கும்.

மற்றொரு வகையான வில்கருவி வயலினைத் தலைகீழாக அதாவது பிரடைகள் மேலாகவும், ஒலிப் பெட்டி கீழாகவும் இருக்குமாறு பிடித்துக் கொண்டு வாசிக்கப்படும் கருவியாகும். இவ்வகைக்கருவிகள் சரிந்தா, சாரங்கி, கமாய்ச்சா என்பவை. இதில் சரிந்தாவும் சாரங்கியும் தென் இந்திய இசைக் கருவிகள்.

சரிந்தா



பீகார் மாநிலத்துப் பழங்குடி மக்களிடையே காணப் படும் சரிந்தா என்ற இக்கருவி தமிழ் நாட்டில் பல இடங்களில் வாசிக்கப்பட்டுள்ளது. புதுக்கோட்டை சமஸ்தானத்தில் இருந்த சரிந்தா நாயுடு என்பவர் இக்கருவி இசைப்பதில் திறமை பெற்றவர். சரிந்தாவின் கீழ்ப் பகுதி பேரிக்காய் வடிவமானது. இது மட்டுமே தோலினால் போர்த்தப்பட்டிருக்கும். மிகப் பெரிய மேற் பகுதி இறக்கைகள் உடையது போன்ற ஒரு வடிவை உடையது. முழுதும் திறந்திருக்கும் இப் பாகம் தண்டியின் தொடர்ச்சியாக அமைந்துள்ளது. இதன் மீது முறுக்கப்பட்ட பருத்தி, நரம்பு அல்லது உலோகத்திலான நான்கு தந்திகள் உள்ளன.

சாரங்கியை எடுத்துக் கொண்டால் இசை அரங்குகளில் வாசிக்கப்படும் கருவி. ஒரே மரத்திலானது. அகன்ற உடல், தட்டையான சுரப்பலகை, தோலால் மூடப்பட்ட கீழ்ப்பகுதி (ஒலிப்பெட்டி) கொண்டது. பிரதானத் தந்திகள் நான்கும் நரம்பினால் ஆனவை. பழங்காலத்தில் தேவார இசைக்குப் பக்கக் கருவியாக இசைக்கப்பட்டுள்ளது.

சாரங்கி போன்ற மற்றொரு கருவி தில்ருபா எஸ்ராஜ் என்று அழைக்கப்படும் பாலசரஸ்வதி என்ற கருவியாகும். இது

மெட்டுக்கள் கொண்ட நீண்ட தண்டியும் கொண்டு வில் போட்டு வாசிக்கும் கருவியாகும். வங்காளத்தில் பயன்படுத்தும் ஒரு முக்கியக் கருவி.

**சாரங்கி**



# 6. நரம்புக் கருவிகள் - சிற்பங்கள் வழி

இப்பகுதியில் பல்வேறு நரம்புக் கருவிகளின் சிற்பங்கள் படத்துடன் விளக்கப்பட்டுள்ளன. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுச் சிற்பம் முதல் 17 ஆம் நூற்றாண்டுச் சிற்பம் வரை தென் இந்தியாவின் பல பகுதிகளில் உள்ள சில சிற்பங்கள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. தென்னிந்தியாவில் அஜந்தா, எல்லோரா, கருநாடக, தமிழ்நாடு பகுதிகளில் உள்ள சிற்பங்கள் சில ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இதன்வழி வளைந்த வில் வடிவத்திலிருந்த தண்டி நீண்டு, குடங்கள் சேர்க்கப்பட்டு, மெட்டுக்கள் அமைக்கப்பட்டு, ஒரு நரம்பு பல நரம்புகளாக்கப்பட்டு, பலவித மாற்றங்கள் பெற்றுள்ளது எனக் காணமுடிகிறது. மேலும் ஆண்களை விடப் பெண்களே அக்காலத்தில் யாழ் மற்றும் நரம்புக் கருவிகளை வாசித்துள்ளார்கள் என்றும் தெரிய வருகிறது.

**சிற்பங்களில் நரம்புக் கருவிகள்**

**நடன நிகழ்ச்சியில் - நரம்புக் கருவிகள்**



இது கி.பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த பழமையான சிற்பம். இது பாவாயா என்ற இடத்தில் உள்ளது. இதில் ஒரு நடனமாது நடுவில் நடனம் ஆட வலப்புறம் நீண்ட தண்டி, விரல் பலகை, நரம்புகள், கொண்ட நரம்புக் கருவியும், இடப்புறம் வில்வடிவ நீண்ட தண்டியை உடைய யாழ் நரம்புக் கருவியும் வாசிக்கப்படுகின்றன. யாழ் இடது கையால் வாசிக்கப் படுவதையும், மற்றொரு நரம்புக் கருவி வலது கையில் மீட்டி இடது கையால் வாசிக்கப்படுவதையும் நம்மால் காண முடிகிறது. மேல்புறம் தோல் கருவி வாசிப்பவர்கள் காணப்படுகிறார்கள்.

## அஜந்தா - குகைச் சிற்பம்



அஜந்தாவில் நான்காம் குகையில் உள்ள சிற்பம் இது. இதில் உள்ள நரம்புக்கருவி மெட்டுக்கள் மற்றும் சிறிய குடம் கொண்டது. கருவியை ஒரு பெண் அமர்ந்த நிலையில் வாசிக்கிறாள். கருவி சிறிய கழுத்தைக் கொண்டதாக உள்ளது. வலதுகை விரல்களால் மீட்டி, இடது கை விரல்களால் வாசிக்கப்படுகிறது.

## குப்தர் கால நரம்புக் கருவி



The [illegible] scene. The bow plectrum can be seen in the right arm of the player. Kausambi. Gupta period.

நரம்புக் கருவியின் தண்டி படகு அல்லது வில் போல் வளைந்து உள்ளது. நரம்புக் கருவியின் ஒரு முனை வெளியே தெரியும்படியும், மறுமுனை வலது கையின் அடியில் அழுத்தப்பட்டு வலது கை விரல்களால் வாசிக்கப்படுகிறது. இது குப்தர்கள் காலச் சிற்பமாகும். வலது கை விரல்களில் ஒரு சில்லு அல்லது மீட்டி வைத்து வாசிக்கின்றனர்.

## இசை நிகழ்ச்சியில் நரம்புக்கருவி



பலர் கூடிச் செய்யும் இசை நிகழ்ச்சியில் ஒரு பெண் அமர்ந்து பாட, ஒரு பெண் நின்ற நிலையில் நரம்புக் கருவியை வாசிக்கிறாள். கருவி நீண்ட படகு அல்லது வில் போன்ற தண்டியும் நரம்புகளும் கொண்டதாக உள்ளது. இக்கருவி மார்பின் குறுக்கே தோளில் தொங்கவிடப்பட்டுள்ளது. இடது கை வாசிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## பாணன், பாணினியுடன் யாழுடன் ஆடுதல்



கையில் நரம்புக் கருவியுடன் பாணனும் அவன் மனைவியும் ஆடிக் கொண்டு நரம்புக் கருவியை வாசிக்கின்றனர். பாணன் கையில் உள்ள நரம்புக்கருவி நீண்ட தண்டி, குடம் நரம்புகள் கொண்டதாக உள்ளது. சிற்பத்தில் இடது கையால் மீட்டி வலது கையால் வாசிப்பது போல் உள்ளது.

## வில் வடிவ நரம்புக் கருவியை வாசிக்கும் ஒரு பெண்



இப்பெண்ணின் கையில் இருக்கும் யாழ் வில் வடிவமானது. நரம்புகள் காணப்படுகின்றன. வலது கை, இடது கை இரண்டு கை விரல்களும் வாசிக்கப் பயன்படுத்தப் பட்டுள்ளன. அப்பெண் அமர்ந்த நிலையில் யாழ் மீட்டுகிறாள். யாழ் மடியில் வைத்து வாசிக்கப்பட்டுள்ளது.

## எல்லோராக் குகை நரம்புக் கருவி



Kauwantri Veena (Ellora)

எல்லோராவில் உள்ள குகைச் சிற்பம் இது. சப்த கன்னி யர்களின் ஒருவர் ஒரு தந்தி நரம்புக் கருவி ஒன்றை அமர்ந்த நிலையில் வாசிக்கிறார். நரம்புக் கருவியின் தண்டி மெல்லியதாக மார்பின் குறுக்கே உள்ளது. தண்டின் மேல் புறம் ஒரு குடம் உள்ளது. வலதுகை மீட்டவும், இடது கை விரல்கள் வாசிக்கவும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## காஞ்சிபுரம் - நரம்புக் கருவி



இது காஞ்சிபுரம் கைலாச நாதர் கோயிலில் காணப்படும் சிற்பம். இது 8 அல்லது 9ஆம் நுற்றாண்டைச் சேர்ந்த சிற்பம். இங்கு இறைவன் அமர்ந்த நிலையில் நரம்புக் கருவியை வாசிப்பது போல் உள்ளது. இக்கருவியில் நீண்ட தண்டி ஒரு குடத்துடன் உள்ளது. கருவியின் மேல் முனையில் குடம் தோளில் நிறுத்தப்பட்டுள்ளது. மார்பின் குறுக்கே வலது கைவிரல்கள் மீட்டுவதற்கும், இடது கை விரல்கள் வாசிப்பதற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## படமியில் - நரம்புக்கருவிகள்



Ekatantri Veena
(Badami)

கருநாடகப் பகுதியில் உள்ள படமி என்ற குடைவரைக் கோயிலில் உள்ள சிற்பம் இது. இச்சிற்பம் குகை ஒன்றில் காணப்படுகிறது. இதில் சிவன் ஒரு தந்தி கொண்ட நரம்புக் கருவியை வாசிக்கின்றார். ஒரு குடமும், நீண்ட குழல் போன்ற தண்டியும் கொண்ட இசைக்கருவி. குடம் இடது மார்பின் மீது வைத்து வாசிக்கப்பட்டுள்ளது. வலது கைவிரல்கள் மீட்டுவதற்கும் இடது கை விரல்கள் வாசிப்பதற்கும் பயன் படுத்தப்பட்டுள்ளன.

## இரண்டு குடம் கொண்ட நரம்புக் கருவி



இது 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பம். இது கொடம்பலூரில் உள்ளது. இக்கருவி நீண்ட தண்டியும் கீழ்ப்புறம், மேல்புறம் என இரண்டு குடங்களும், ஒற்றை நரம்பும் கொண்ட நரம்புக் கருவி. கருவி மார்பின் குறுக்கே இரண்டு குடத்தில் ஒன்று வாசிப்பவரின் இடது தோளில் நிறுத்தி வாசிக்கப்படுகிறது. வலது கை மீட்டவும், இடது கை விரல்கள் வாசிக்கவும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## காஞ்சிபுரத்தில் உள்ள ஒரு தந்தி நரம்புக் கருவி



இது 8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நரம்புக் கருவியின் சிற்பம். இது காஞ்சிபுரம் மாவட்டத்தில் காணப்படுகிறது. இது நீண்ட தண்டியும் கீழ் ஒரு சிறிய குடமும் கொண்டது. குடம் தொடையில் நிறுத்தி வலது கையால் மீட்டியும், இடது கையால் வாசித்தும் காட்டப்பட்டுள்ளது.

## குழல் வடிவத் தண்டியுடன் கூடிய நரம்புக் கருவி



இது கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தது. கருநாடக மாநிலத்தில் அபனர் என்ற இடத்தில் உள்ள ஹரசத்மாதா அம்மன் கோயிலில் காணப்படும் சிற்பம். ஒரு பெண் நீண்ட குழல் வடிவத் தண்டியுடன் கூடிய நரம்புக் கருவியை மீட்டுகிறாள். வலது கை மீட்டவும் இடது கை மெட்டுக்கள் மேல் வாசிக்கவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. மெட்டுக்கள் தண்டியின் மேற்புறத்தில் வெளியில் தெரியும்படி அமைந்துள்ளன.

## நீள்வட்ட வடிவ (இசை ஒலிபெருக்கி)க் குடம் கொண்ட நரம்புக் கருவி



இந்தச் சிற்பம் கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தது. கருநாடக மாநிலத்து, அபனர் என்ற இடத்தில் உள்ள ஹரசத்மாதா அம்மன் கோயிலில் காணப்படுகிறது. இக்கருவியின் குடம் நீள் வட்ட வடிவமாகக் கருவியின் பாதி நீளத்திற்கு உள்ளது. இதன் சிறிய கழுத்து கீழ் நோக்கி வளைந்து உள்ளது. அதன் முனையில் திருகுகள் காணப்படுகின்றன. வலது கை மீட்டுவதற்கும் இடது கை விரல்கள் வாசிப்பதற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஒரு தந்தி நரம்புக்கருவியுடன் சரஸ்வதி



புவனேஷ்வருக்கு அருகில் உள்ள கரலங்கா என்ற இடத்தில் உள்ள ஜடேஸ்வரர் கோயிலில் உள்ள சிற்பம் 11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. இதில் விநாயகருடன் சரஸ்வதி ஒரு நீளத் தண்டியுடைய ஒரே ஒரு நரம்புக் கொண்ட கருவியை வாசிக்கிறாள். இடது தோளில் குடம் அமர்த்தப்பட்டுள்ளது. வலது கையால் மீட்டியும் இடது கையால் வாசித்தும் இருக்கும் படி சிற்பம் உள்ளது.

## விஷ்ணுபூர் கோயிலில் கிருஷ்ணன் கோபியருடன் (நரம்புக் கருவியுடன்) ஆடுதல்



விஷ்ணுபூர் சோமநாதர் கோயிலின் மேற்சுவற்றில் தாமரை இதழில் கிருஷ்ணன் கோபியருடன் ஆடுவதாகச் செதுக்கப் பட்டுள்ளது. இதில் கோபியர் நீண்ட தண்டி, ஒரு குடம், உடைய ஒற்றை நரம்புக் கருவியை நேராகப் பிடித்தபடி, குடத்தைத் தொடையில் நிறுத்தி ஆடும் கோலத்தில் உள்ளனர்.

## ஹம்பியில் உள்ள நரம்புக் கருவி



Ekatantri Veena (Hampi)

கருநாடகாவில் ஹம்பி என்ற இடத்தில் உள்ள சிற்பம் இது. 12 முதல் 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. இது ஓர் இசைக் குழுவின் சிற்பம். நரம்புக் கருவி வாசிப்பவர் நடுவிலும் இருபுறமும் பிற கருவிகள் வாசிப்பவர்களும் உள்ளனர். நரம்புக் கருவி நீண்ட தண்டியும் ஒரு குடமும் கொண்டதாக உள்ளது. வாசிப்பவர் நின்ற நிலையில் வாசிக்கின்றார். வலது கை மீட்டவும் இடது கைவிரல் வாசிக்கவும் பயன்படுத்தப் பட்டுள்ளன.

## கும்பகோணம் கோயில் நரம்புக் கருவி



கும்பகோணத்தில் உள்ள இராமசாமி கோயிலில் உள்ள சிற்பம் இது. இது 17 ஆம் நூற்றாண்டின் சிற்பம். மூன்று குடங்கள் கொண்டதாய் வலது புறம் மீட்டவும், இடதுபுறம் வாசிக்கவும் தண்டி அமைந்துள்ளது. நீளமான தண்டியில் 8 மெட்டுக்கள் உள்ளன. மெட்டுக்கள் தண்டியின் நடுவில் நெருக்கமாக உள்ளன. வலது கையின் நடுவிரல் மீட்டப் பயன் படுத்தப்பட்டுள்ளது.

## ஒரு தந்தி நரம்புக் கருவி



கருநாடக மாநிலத்தில் ஹளேபேட் என்ற இடத்தில் கி.பி. 12 முதல் 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பம் இது. ஒரு பெண் இந்த நரம்புக்கருவியை வாசிக்கிறாள். கருவி செங்குத்தாக இடது கையின் கட்டை விரலுக்கும் மோதிர விரலுக்கும் இடையே பிடிக்கப்பட்டுள்ளது. நீண்ட தண்டியில் ஒரு புறத்திலிருந்து மத்தி வரை 10 முதல் 11 மெட்டுக்கள் காணப்படுகின்றன. ஒரே ஒரு தந்தி கொண்டதாக உள்ளது.

## மெட்டுக்கள் உள்ள நரம்புக் கருவி



பேலூரில் காணப்படும் இச்சிற்பம் ஒரு குடம், நீண்ட தண்டி, 14 மெட்டுக்கள் கொண்ட ஒரு நரம்புக்கருவி. மெட்டுக்கள் விரல் பலகையின் மேற்பகுதியில் உள்ளன. கருவி செங்குத்தாக நேராகப் பிடிக்கப்பட்டுள்ளது. குதிரை கீழ்ப்பக்கம் உள்ளது. தந்திகள் கட்டை விரலுக்கும் மோதிர விரலுக்கும் இடையே ஒரு சில் அல்லது மீட்டி பிடித்து மீட்டப்பட்டுள்ளன. மெட்டுக்கள் ஒரு புறத்திலிருந்து தண்டியின் நடுப்பகுதி வரையில் உள்ளன.

## சோமநாத்பூர் - நரம்புக்கருவிகள்







இவை சோமநாத்பூரில் உள்ள கேசவ கோயிலில் உள்ள ஒரு தந்தி கொண்ட நரம்புக் கருவிகள் கொண்ட சிற்பங்கள். ஒவ்வொரு சிற்பத்திலும் நரம்புக் கருவி வெவ்வேறு நிலைகளில் (படுக்கை நிலையில், குறுக்காக, என்று) வைத்து வாசிக்கப் படுகிறது. வலதுகை மீட்டுவதற்கும் இடதுகை வாசிப்பதற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவை 12 முதல் 14 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

## ஹளேபேடில் உள்ள நரம்புக்கருவிச் சிற்பம்



Fretted Veena with flute (Halebid)

கருநாடகப் பகுதியில் ஹளேபேட் என்ற இடத்தில் ஹோய்சளேஸ்வரர் கோயிலில் காணப்படும் சிற்பம் இது. ஒரு நரம்புக்கருவி வலது கை தண்டியின் கீழ்ப் புறத்தில் மீட்டியும் இடது கை மெட்டுகளில் வாசிக்கவும் உள்ளது. குடம் இடது தோளில் மேல் பக்கத்தில் உள்ளது. புல்லாங்குழல் கலைஞருடன் சேர்ந்து வாசிப்பதாக உள்ளது.

## ஒற்றை நரம்புக் கருவி - ஹளேபேட்



Ekatantri Veena (Halebid)

ஹளேபேட் என்ற இடத்தில் நீண்ட தண்டி, ஒரு குடத்துடன் காணப்படும் இந்த நரம்புக்கருவி ஒரே ஒரு நரம்பு கொண்ட கருவி. இக்கருவியை வலது கையால் மீட்டியும், இடது கை விரல்களால் வாசித்தும் உள்ளனர்.

## அமராவதி நடன நிகழ்ச்சி



அமராவதியில் உள்ள சிற்பம் ஒரு நடன நிகழ்ச்சியைக் காட்டுகிறது. இதில் நீண்ட தண்டியை உடைய நரம்புக் கருவி மிக நன்றாகத் தெரிகிறது. அக்காலக் கட்டடத்தின் நரம்புக் கருவியைப் பற்றித் தெரிந்து கொள்ள இச்சிற்பம் உதவுகிறது.

### நாகார்ஜுனகொண்டா நரம்புக்கருவி



இக்கருவி வளைந்த படகு அல்லது வில் போன்ற தண்டி உடையதாக உள்ளது. வில் யாழின் வளர்ச்சியடைந்த நரம்புக் கருவியாக உள்ளது. நரம்புகள் வயிற்றுப் பகுதியிலிருந்து மேல் கை வரை காணப்படுகின்றன. இக் கருவி ஒரு தோலுடன் கட்டப்பட்டு வாசிப்பவரின் தோளில் தொங்க விடப்பட்டுள்ளது.

### நடன இசைக் குழுவில் நரம்புக்கருவி





கருநாடகப் பகுதியில் சரித்திரப் புகழ் வாய்ந்த ஐயோல் என்ற இடத்தில் உள்ள துர்க்கை அம்மன் கோயில் வாசலில் உள்ள ஒரு தூணில் செதுக்கப்பட்டுள்ள சிற்பம் இது. இதில் ஓர் இசைக் குழுவில் ஒரு பெண் நீண்ட தண்டியும், ஒரு குடமும் கொண்ட ஒரு நரம்புக் கருவியை வாசிப்பது தெளிவாகத் தெரிகிறது.

## நான்கு நரம்புகள் கொண்ட நரம்புக்கருவி



இது ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு சிற்பம். இது கருநாடகாவில் பட்டடகல் என்ற இடத்தில் உள்ள பாபநாதர் கோயிலில் உள்ள ஒரு சிற்பம். இச்சிற்பத்தில் ஒரு பெண் 4 நரம்புகள் கொண்ட ஒரு நீண்ட தண்டி, குடம் உடைய ஒரு நரம்புக் கருவியை வாசிக்கிறாள்.

## இராமேஸ்வரம் - நரம்புக்கருவி



இக்கருவி 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இது இராமேஸ்வரம் கோயிலில் காணப்படுகிறது. ஒரு குடம், நீண்ட தண்டியும் கொண்ட நரம்புக் கருவி மெட்டுக்கள் தண்டியின் ஒரு முனை வரை காணப்படுகின்றன. குடம் தண்டியின் ஒரு முனையின் கீழ்ப் பகுதியில் இணைக்கப்பட்டுள்ளது. இக்கருவி மார்பின் குறுக்கே வைத்து வலது கைவிரல்களால் மீட்டப்பட்டு இடது கைவிரல்களால் வாசிக்கப்படுகிறது.

## பட்டீஸ்வரம் - நரம்புக்கருவி



இது 17 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நரம்புக் கருவி. இச்சிற்பம் பட்டீஸ்வரம் கோயிலில் உள்ளது. நரம்புக் கருவி ஒரு குடம், நீண்ட மெட்டுக்களுடன் கூடிய தண்டி கொண்டது. மார்பின் குறுக்கே வைத்து வலது கைவிரல்கள் மீட்டுவதற்கும் இடது கைவிரல்கள் வாசிப்பதற்கும் பயன்படுத்தப் பட்டுள்ளன. தண்டியின் மேல் முனை வளைந்து உள்ளது. நான்கு நரம்புகள் கொண்டதாக உள்ளது.

# 7. நரம்புக்கருவிகள் - இலக்கியம் வழி

இப்பகுதியில் நரம்புக் கருவிகள் பற்றிச் சங்க இலக்கியம் முதல் பல்வேறு நூல்களில் கூறப்பட்ட சிறப்பு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

எடுத்துக் காட்டப்பட்டுள்ள நூல்கள்

1. பத்துப்பாட்டு
2. எட்டுத்தொகை
3. பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்
4. சிலப்பதிகாரம்
5. தேவாரம் - திருஞானசம்பந்தர், அப்பர்
6. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்
7. கம்பராமாயணம்
8. மணிமேகலை
9. வளையாபதி
10. சூளாமணி
11. பெருங்கதை
12. சீவக சிந்தாமணி
13. கல்லாடம்
14. பெரிய புராணம்
15. உதயண குமாரகாவியம்
16. திருவிளையாடல் புராணம்
17. திருவிசைப்பா, திருவாசகம்
18. குமரகுருபரர் நூல்கள்

# 1. பத்துப்பாட்டில் நரம்புக் கருவிகள்

## 1. திருமுருகாற்றுப் படையில் யாழ்

*1) நல் யாழ் நவின்ற நயனுடை . . . . - 141*

## 2. சிறுபணாற்றுப்படையில் யாழ்

*1) பொன் வார்ந்தன்ன புரி அடங்கு நரம்பின்*
*இன்குரல் சீறியாழ் இடவயின் தழீஇ - 34*

## 3. பெரும்பாணாற்றுப் படையில் - நரம்புக் கருவிகள்

*1. வில்யாழ் இசைக்கும் விரல் - 182*

*2. இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பி - 462*

*3. புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின் - 181*

## 4. மதுரைக் காஞ்சியில் - நரம்புக் கருவிகள்

*1. குரல்புணர் நல் யாழ் முழவொடு ஒன்றி - 604*

*2. யாம நல்யாழ் நாப்பண் நின்ற - 584*

*3. ஏழ்புணர் சிறப்பின் இன்தொடைச் சீறியாழ் - 559*

*4. சீரினிது கொண்டு நரம்பினி தியக்கி*
*யாழோர் மருதம் பண்ண - 657, 658*

## 5. மலைபடு கடாமில் - நரம்புக் கருவிகள்

*1. தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவின்*
*. . . . . . . .*
*வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ் -21 - 35*

*2. மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ் - 534*

*3. இன் இசை நல் யாழ்ப் பத்தரும் - 381*

## 6. நெடுநெல் வாடையில் - யாழ்

*1. ஆடல் மகளிர் பாடல்கொளப் புணர்மார். . . . . .*
*கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப - (67-70)*

# 2. எட்டுத் தொகையில் நரம்புக் கருவிகள்

## 1. கலித்தொகையில் - நரம்புக்கருவிகள்

*1. வீழுநர்க் கிறைச்சியாய் விரல்கவர்பு இசைக்கும் கோல்*
*ஏழும் தம் பயன்கெட இடைநின்ற நரம்பறூஉம்*
*யாழினும் நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ*
*(கலி. 8 - 9 - 11)*

*2. ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை*
*யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செய்யும்?*
*சூழுங்கால் நும்மகள் நுமக்காங் கனையளே -*
*(கலி. 9-18-20)*

*3. நரம்பின் தீங்குரல் நிறுக்கும் குழல் போல் -*
*(கலி. 33 - 22)*

*4. யாழ் வரைத் தங்கியாங்கு - (கலி. 2 - 27)*

*5. கருங்கோட்டு நறும்புன்னை .......*
*அரும்பொருள் மரபின்மால் யாழ்கேளாக் கிடந்தான்*
*போல் (கலி. 123 : 1-4)*

*6. செவ்வழி யாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும் -*
*(கலி. 118 - 15)*

*7. சாய என் கிளவி போல் செவ்வழியாழ் இசை நிற்ப*
*(கலி. 143 - 38)*

## 2. பரிபாடலில் நரம்புக் கருவிகள்

*பரிபாடலில் யாழ் 14 இடங்களில் கையாளப்பட்டுள்ளது*

*1. தொல் இயல் புலவ நல்லியாழ்ப் பாண - (3 - 86)*

*2. எழூஉப்புணர் யாழும் இசையும் கூட - (7 - 78)*

*3. ஏழ் புழை ஐம்புழை யாழ் இசை கேழ்த்து - (8 - 22)*

*4. பருக்கோட்டு யாழ்ப்பக்கம் பாடலோடு ஆடல் - (10-56)*

*5. பூ ஊது வண்டினம் யாழ் கொண்ட கொளை*
*கேண்மின் - (11 - 124)*

6. ஒரு திறம் பாணர் யாழின் தீங்குரல் எழ - (17 - 9)

7. யாணர் வண்டினம் யாழ்இசை பிறக்க - (21 - 35)

8. கவர் தொடை நல்யாழ் இமிழக் காவில் - (22 - 38)

9. யாழின் இளிகுரல் சமம் கொள்வோரும் - (19 - 42)

10. புரிஉறு நரம்பும் இயலும் புணர்ந்து - (18 - 51)

11, வண்டொடு தும்பியும் வண்டொடை யாழ் ஆர்ப்ப -
(திரட்டு. 1 - 50)

## 3. அகநானூற்றில் - நரம்புக் கருவிகள்

1. விளரி நரம்பின் நயவரு சீறி யாழ் - அகம். 279

2. சீறியாழ்ப் பாணர் ஆர்ப்ப - அகம் - 331

3. பல் இதழ் மென் மலர் உண்கண் நல்யாழ்
நரம்பு இசைத் தன்ன இன்தீம் கிளவி - (அகம் - 109)

4. நயவன் தைவரும் செவ்வழி நல்யாழ்
இசை ஓர்த்தன்ன இன்தீம் கிளவி (அகம் - 212)

5. பையுள் நல்யாழ் செவ்வழி பிறப்ப - 314

6. பண் அமை நல்யாழ்ப் பாண னொடு - 346

7. செவ்வழி நல்யாழ் இசை யினென் - 14

8. தொடிக் கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பின் தீவிய மொழிந்தே - 142

9. இடியும் முழக்கும் இன்றி பாணர்
வடிவுறு நல்யாழ் நரம்பு இசைத்தன்ன - 374

10. ஆடமைக்குயின்ற ---------------------
மலைப் பூஞ்சாரல் வண்டு யாழ் ஆக - 82

11. குன்றத்து இரும்புலி-------------------
தொழுதி ஆர்ப்ப யாழ் செத்து - 88

12. மனையோள் சொல்..... செவ்வழி நல்யாழ்
இசையினென் - 14

13. செவ்வழி நல்யாழ் இசையோர்த் தன்ன - 212

14. தீந்தொடை விளரி நரம்பின் நயம் வரு சீறியாழ் - 279

## 4. புறநானூற்றில் - நரம்புக் கருவிகள்

1. கையது கடனிறை யாழே - 69

2. களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ் - 127

3. மண்முழா...... பண்யாழ் நிறுமின் - 152

4. தே எந் தீந்தொடைச் சீறியாழ்ப் பாணி

5. படுமலை நின்ற பயங் கெழு சீறியாழ் - 135

6. பொன்வார்த் தன்ன புரியடங்கு நரம்பின் மின்னேர்

7. இன்குர லிரும்பை யாழொடு ததும்ப - 332

8. நல்யாழ் மருப்பின் மெல்ல வாங்கி - 242

9. பாணி வணர்கோட்டுச் சீறியாழ்க்
கைவார் நரம்பின் பாணர் - 302

10. தீந்தொடைச் சீறியாழ்ப் பாணன் - 285

11. சுகிர்புரி நரம்பின் சீறியாழ்ப் பண்ணி - 109

12. வள்ளுயிர்ச் சீறியாழ் - 138

13. வணர் கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத்தழீஇ - 155

14. சீறியாழ் செவ்வழிப் பண்ணி - 144

15. கைவல் சீறியாழ் - 398

16. கருங் கோட்டுச் சீறியாழ்ப் பணையம் - 316

17. சீறியாழ் செவ்வழிப் பண்ணி - 146, 147

18. மிஞிற்றுக் குரற் சீறியாழ் - 308

## 5. நற்றிணையில் நரம்புக் கருவிகள்

1. பாணன் கையது பண்புடைச் சீறியாழ் - 30

2. தீம் தொடை நரம்பின் இமிரும் - 17

3. கைகவர் நரம்பின் பனுவற் பாணன் - 200

4. சுரம்செல் கோடியர் கதுமென இசைக்கும் நரம்பொடு - 212

5. நெய்வார்ந்தன்ன துய் அடங்கு நரம்பின் - 300

6. கொள்ளா நரம்பின் இமிரும் பூசல் - 35

7. பாண் யாழ் கடைய

8. விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ் - 335

9. சீறியாழ் நரம்பு இசைத்தன்ன - 189

10. பொன்புரை நரம்பின் இன்குரல் சீறியாழ் - 380

## 6. ஐங்குறுநூறு - நரம்புக் கருவிகள்

1. கைவல் சீறியாழ்ப் பாண - 472

2. முல்லை நல்யாழ்ப் பாண - 478

## 7. குறுந்தொகையில் - நரம்புக் கருவிகள்

1. கழனி யம் படப்பைக் காஞ்சியூர
ஒரு நின் பாணன் - பொய்யனாக - 127

2. பாணர் பசுமீன் - சொரிந்த மண்டை போல - 169

3. வானத் தஞ்சுவர நல்லிசை வீழப்பெய்த - 323

## 8. பதிற்றுப்பத்தில் - நரம்புக் கருவிகள்

1. புணர் புரி நரம்பின் தீந்தொடை பழுனிய
வணரமை நல்யாழ் இளையர் பொறுப்ப - 41 - 1

2. தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன் - 65 - 14

3. வண்டுபடு கூந்தன் முடிபுனை மகளிர்
தொடைபடு பேரியாழ் பாலை பண்ணி - 46 - 4

4. பாணர் கையது பணி தொடை நரம்பின்
விரல்கவர் பேரியாழ் பாலை பண்ணி - 57 - 7

5. வாங்கிடை மருப்பில் தீந்தொடை பழுனிய
இடனுடைப் பேரியாழ் பாலை பண்ணி - (66 - 1)

## 3. பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் - நரம்புக் கருவிகள்

1. குழலினிது யாழினிது என்பர்தம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர் (குறள் - 66)

2. ............. பண்ணிய
யாழொக்கும் நட்டார் கழறும் சொல் - நான்மணி-98-2

3. (அறிய வேண்டி ஐந்தில் யாழ் ஒன்றாகக்
கூறப்பட்டுள்ளது சிறுபஞ்சமூலத்தில்)
'யாழினொடு எண்ணுங்கால்' - சிறுபஞ் - 92

4. பண்ணமையா யாழின் கீழ்ப் பாடல் பெரிதின்னா
இன்னா - 31

5. திணைமாலை நூற்றைம்பது

   1. செவ்வழி யாழ் - 124
   2. மாக்கோல் யாழ் - 125
   3. விளரி யாழ் - 126
   4. மடங்கிறவு போலும் யாழ் - 131
   5. பாலை யாழ் - 133

6. யாழ்ப்பாண - கைந்நிலை - 48 .3

7. யாழும் குழலும் முழவும் இயைந்தென
வீழு மருவி விறல் மலை நல் நாட -
(திணைமொழிஐம்பது 7 - 1)

8. பண்ணின் தெரியாதான் யாழ் கேட்பும் இம்மூன்றும்
எண்ணின் தெரியாப் பொருள் - (திரிகடுகம் 53).

# 4. சிலப்பதிகாரம் கூறும் நரம்புக் கருவிகள்

*1. யாழ்வகைகள்*

ஒன்று மிருபது மொன்பதும் பத்துடனே
நின்ற பதினான்கும் பின்னேழும் - குன்றாத
நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொல் முறையே
மேல்வகை நூலோர் விதி - (சிலம்பு)

*2. யாழும் குழலும் சீரும் மிடறும் - (சிலம்பு. 3. 26)*

*3. யாழாசிரியன் அமைதி*

நீடிக் கிடந்த கேள்விக் கிடக்கையின்
இணை நரம்பு உடையன அணைவுறக் கொண்டாங்கு
யாழ்மேற் பாலை இடமுறை மெலியக்
குழன் மேற் கோடி வலமுறை வலிய - *(சிலம்பு. 3: 89-92)*

*4. யாழின் தன்மைகள்*

*பயிர் வண்டின் கிளைபோலப் பல் நரம்பின்மிசைப்பட்டு*
வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல்
சீருடன் உருட்டல் தெருட்டல் அள்ளல்
ஓர் உடைப் பட்டடை என இசையோர் வகுத்த
எட்டு வகையின் இசைக் கரணத்து - *(கானல்வரி- 7 - 11)*

*5. குழல்வழி நின்றது யாழே யாழ் வழித்*
*தண்ணுமை நின்றது தகவே - (அரங் . 139 - 140)*

*6. நாரதன் வீணை நயந்தெரி பாடலும் . . . . . .*
*மங்கலம் இழப்ப வீணை மண்மிசைத்*
*தங்குக (கடலாடு 6:18-23)*

*7. அதிரா மரபின் யாழ் கை வாங்கி*
*- (வேனிற்காதை 8 - 23)*

*8. வணர் கோட்டுச் சீறியாழ் - (28 - 31)*

*9. குழலினும் யாழினும் குரல் முதல் - (5 - 35)*

10. சித்திரப் படத் துட்புக்குச் செழுங்கோட்டின் மலர்
புனைந்து
மைத் தடங்கண்மணமகளிர்கோலம்போல்வனப்பெய்திப்
பத்தரும் கோடும் ஆணியும் நரம்புமென்
றித்திறத்துக் குற்றம் நீங்கிய யாழ் கையில் தொழுது
வாங்கி (7 - 1 - 4)

11. பாடும் பாணரில் பாங்குறச் சேர்ந்து
செந்திறம் புரிந்த செங்கோட் டியாழின்
தந்திரி கரத்தொடு திவவுறுத் தியாஅத்
தொற்றுறுப் புடைமையில் பற்றுவழிச் சேர்த்தி -
(13 - 105)

## 5. திருஞான சம்பந்தர் தேவாரத்தில் - நரம்புக் கருவிகள்

1. குழல் யாழ் முரலத் துன்னிய இன்னிசை

2. வண்டினம் குழலொலி யாழ் செய்கோவலூர்

3. காலையொடு துந்துபிகள் சங்கு குழல் யாழ் முழவு -
திருமாகறல் -

4. மொந்தை முழாக் குழல் தாளமொர் வீணை

5. வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி

6. பல்லிதழ் மாதவி அல்லிவண்டு யாழ் செய்யுங்
காழியூரன் - திருவாரூர்

7. அறையார் கழலன் அழலன் இயலின்
பறையாழ் முழவும் மறை பாட - திருக்குடவாயில்

8. கொடுகொட்டி வீணை முரல - நனிபள்ளி

9. பரசுபாணியர் பாடல் வீணையர் - பல்லவனீச்சரம்

10. கீதமுன் னிசைதரக் கிளரும் வீணையர் -
திருவிசயமங்கை

11. பண்ணுலாம் பாடல் வீணை - திருசாத்தமங்கை

12. உரைப்பது வீணையே ஆலவாய் அரன்கையது
வீணையே - திரு ஆலவாய்

13. எம்மினை நல் வீணை வாசிக்குமே -
பண்ணு மூன்று வீணையோடு -

14. யாழின்னிசை வல்லார் சொலக் கேட்டார்- வீழிமிழலை

15. பாணில் யாழ் முரலும் புரவார் - பனங்காட்டூர்

16. பண்ணியாழ் பயில்கின்ற மங்கையர் - நல்லூர்

17. இன்குரல் இசைகெழும் யாழ் முரல -சிவபுரம்

18. நெருக்கினார் விரலினால் நீடியாழ் பாடவே - கழுமலம்

19. முழவொலி யாழ் குழல் மொந்தை கொட்ட

20. பண்ணில் யாழினர் பயிலு மொந்தையர் -
பல்லவனீச்சரம்

21. பாலை யாழ் வேணுபுரம் பதியாக - வேணுபுரம்

22. பாலை யாழ் பாட்டுகந்தான் உறை கோயில்

23. பஞ்சுரம் பாடி வண்டி யாழ் முரலும் -

24. கூடரவ மொந்தை குழல் யாழ் குழவினோடும் - அவனீவ
நல்லூர்

25. கொம்பார் சோலை கோல வண்டு யாழ் செய்
குற்றாலம்

26. பாடல் வீணையர் - திருகேதீச்சரம்

முதல் திருமுறையில் யாழ் பற்றி 20 பாடல்களிலும் *(92, 133, 147, 495, 522, 523, 571, 572, 574, 575, 578, 591, 698, 708, 874, 903, 988, 1039, 1349, 1357)*

இரண்டாம் திரு முறையில் - 9 பாடல்களிலும் *(1480, 1550, 1813, 2082, 2095, 2063, 2500, 2584, 2633)*

மூன்றாம் திருமுறையில் 15 பாடல்களிலும் யாழ் பற்றிக் கூறுகிறார்.

*2867, 2948, 2981, 2989, 3043, 3163, 3223, 3279, 3301, 3429, 3622, 3654, 3659, 3742, 4016*

## அப்பர் தேவாரத்தில் - நரம்புகள் கருவிகள்

1. பண்ணார்ந்த வீணை பயின்ற விரலவனே - 6 .6 .1
2. மாசில் வீணையும் மாலை மதியமும் - குறுந்தொகை
3. பண்ணீனார் கின்னரங்கள் - 33. 5. 2
4. கின்னரத் தன்னை வைத்தல் - 38. 9. 2
5. கின்னரம் பாடல் கேட்டார் - 43. 3. 2
6. பாடில் வீணை பயின்றவன் வீரட்டம் - 167. 1. 3
7. வளைத்தெழு சடையினர் மழலை வீணையர் - திருஅதிகை
8. தங்கையில் வீணை வைத்தார் - திருமறைக்காடு
9. வெட்டி வீணைகள் பாடும் - திரு அண்ணாமலை - குறுந்தொகை
10. விரவினார் பண் கெழுமிய வீணையும் - திருப்பாலைத்துறை
11. குழல் மொந்தை தானம் வீணை - திருவாரூர்
12. பண்ணொடி யாழ்வீணை பயின்றாய் போற்றி - கயிலாயம்
13. கொக்கரை சச்சரி வீணை பாணியானை - நாரையூர்
14. ஏழிசை யாழ் வீணை முரலக் கண்டேன் - திருவாய்மூர்
15. சாமத்தின் இசை வீணை தடவிக் கொண்டார் - 6. 96. 10
16. பண்ணார்ந்த வீணை பயின்ற துண்டோ - (6. 94. 4)

17. ஒரு கை வீணை யுண்டு - 6. 97. 49

18. பொரு கையில் வீணை - திருவதிகை

## 14) சேக்கிழார் பெரிய புராணத்தில் - நரம்புக் கருவிகள்

1. அந்தரத் தெழுந்த ஓசை அன்பினில் பாணர் பாடும்
சந்த யாழ் தரையிற் சீதம் தாக்கில் வீக்கழியும் என்று
திருநீலகண்ட யாழ்ப்பாணர் புராணம் - 6

2. யாழேழும் ஓசையுடன் இருவர் மிடற் றிசை யொன்றி
(திரு. ஞான. புரா. - 135)

3. யாழின் முறைமையினிட்டே எவ்வுயிரும் மகிழ்வித்தார்
ஏழிசையும் பணி கொண்ட நீல கண்ட யாழ்ப்பாணர்
(திரு. ஞான. புரா. - 139)

4. ஏதமில் விபஞ்சி வீணை யாழொலி ஒரு பாலேத்தும்
நாதமங்கலங்கள் கீத நயப்பொலி ஒரு பாலாக
(திரு.ஞான. புரா.1200 - 1)

5. நேர் வைத்த வீணைக்கும் யாழுக்கும் நிலை வகையால்
சேர்வுற்ற தந்திரியும் - (திரு நாளை . புரா. 14 - 1)

## 6. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் - நரம்புக் கருவிகள்

### பெரியாழ்வார் பாசுரம்

1. நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனும் தந்தம்
வீணை மறந்து கின்னரம் மிதுனங்களும் தந்தம் கின்னரந்
தொடுகிலோ மென்றனரே - 50 . 279. 3

2. யாழினிசை வண்டினங்க ளானம் வைக்கு - 70 . 407. 4

3. இணையில்லா வின்னிசை யாழ் கெழுமியின்பத்
தும்புரு நாரதனு மிறைஞ்சி - 117 - 651 - 1

4. யாழ் குழல் குழவ மோடிசை - 162 . 9. 2

## பெரிய திருமொழி

1. பண்ணினின் மொழி யாழ் நரம்பிற் பெற்ற
2. ஆர்மலி யாழி சங்கொடு

## பெரிய திருமடல்

1. இன்னிசை யாழ்ப் பாடல் கேட்டின்புற்று
2. முன் நல் யாழ் பயில் நூல் நரம்பின்
3. யாழினிசையே யமுதே யறிவின் பயனே
4. சீருற்ற வகிற் புகை யாழ் நரம்பு பஞ்சமம்
5. யாழ் குழல் முழவமோ டிசை திசை கெழுமி
   கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர் - தொண்டரடி -
   திருப்பள்ளி - 9 - 1 எழுச்சி

## 15) உதயண குமார காவியம் - நரம்புக் கருவிகள்

1. தெய்வ நல்லியானை கண்டு சென்று தன் வீணை பாடப்
   பையெனக் களிறுங் கேட்டுப் பணிந்தடி இறைஞ்சி
   நின்று (உதயண - 19 - 2)
2. மிக்க வீணையை மெய்ந் நரம் பார்த்துடன்
   தக்க ராகத்திற் தான் மிக வாசித்தான். (உதயண - 48 . 3)
3. கீத வீணைசெங் கெந்த மளையும் கை (உதயண - 59 . 1)
4. கந்திறு கைம்மா விக்கோன்
   கை வீணை கடவா தென்ன (உதயண- 94 . 3)
5. திருவலித் தடக்கை வீணை
   சீருடன் பாட லோடும்
   மருவலிக் களிறுங் கேட்டு
   வந்தடி பணிந்த தம்மா - ( உதயண- 97. 3)
6. வீணை நற் கிழத்திநீ வித்தக வுருவிநீ (உதயண - 145 - 1)

உதயண குமார காவியத்தில் கோடவதி வீணையைக் கொண்டு கதை நடக்கிறது. அதே கதையைப் பெருங்கதை கோடவதி என்ற

யாழைக் கொண்டு நடத்துகிறது. யாழின் பெயர் வழக்கு குன்றி வீணை என்ற பெயர் பெருவழக்காகி விட்டதா என்பது சிந்திப்பதற்கு உரியது.

## 7. கம்பராமாயணத்தில் நரம்புக்கருவிகள்

1. தந்தாம் உலகத்திடை விஞ்சையர் பாணி தள்ளும்
   கந்தார வீணைக் களி செஞ் செவிக் காதுநுங்க - 4814

2. மகரவீணையின் மந்திர கீதத்து மறைத்த
   சகர வேலையின் ஆர்கலி - 4863

3. இலக்கண மரபிற்கு ஏற்ற ஏழுவகை நரம்பின் நல்யாழ்
   அலத்தத் தளிர்கை நோவ அளந்து எடுத்து அமைத்த
   பாடல் - 4939

4. கரும்பையும் சுவை கற்பித்த சொல்லியர் காமரம்
   கனி யாழின் நரம்பின் இன்இசை செவிபுக - 5031

5. வயிரியர் மதுர கீதம் மங்கையர் அமுதகீதம்
   செயிரியர் மகரயாழின் தேம்பிழி தெய்வகீதம் - 705

6. இறங்குவ மகரயாழ் எடுத்த இன்னிசை
   நிறங்கினர் பாடலான் நிமிர்வ (146)

7. மழலை யாழிசை யோடு மலிந்தவே - 1113

8. யாழ்க்கும் இன் குழற்கும் இன்பம்
   அளித்தன இவை யாம் என்ன
   கேட்குமென் மழலைச் சொல்லை
   கிஞ்சுகம் கிடந்த வாயான் - 974

9. நல்லியல் மகரவீணை தேனுக - 703

## 8. மணிமேகலையில் - நரம்புக் கருவிகள்

1. யாழோர் மருதத் தின்னரம் புளரக்
   கோவலர் முல்லைக் குழன் மேற் கொள்ள (மணி.5. 135)

2. பண்ணுக்கிளை பயிரும், பண்ணியாழ்த் தீந்தொடை
   கொளை வல்லாயமே டிசைகூட்டுண்டு (மணி. 7. 46)

3. நகர நம்பியர் வளையோர் தம்முடன்
மகர வீணையின் கிளைநரம்பு வடித்த
இளிபுணர் இன்சீர் எஃகுமை இழிப்ப (மணி. 19. 24)

4. கூத்தும் பாட்டும் தூக்கும் துணிவும்
பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலும் (மணி.2.19)

5. பண்ணியாழ் நரம்பிற் பண்ணுமுறை நிறுப்போர்
(மணி. 19- 81)

## 9. வளையாபதியில் நரம்புக் கருவி

1. துக்கந் துடைக்கும் துகளறு காட்சிய
நிக்கந்த வேடத் திருடி கணங்களை
ஒக்க வடிவீழ்ந்த துலகியல் செய்தபின்
அக்கறை யாழ் கொண்டமை வரப் பண்ணி (வளை. 2)

2. எங்ஙனமாகிய திப் பொருளப் பொருட்
கங்ஙன மாகிய வன்பின ராதலின்
எங்ஙனம் பட்டனன் பாண்மகன் பாண்மகற்
கங்ஙன மாகிய யாழும் புரைய - (வளை. 54)

## 10. சூளாமணியில் நரம்புக் கருவிகள்

1. யாழ்வாம் இன்குரல் ஆலித் தார்ந்தரேர்
ஏழை வாய்ச் சுரும்பினம் இளைக்கும் என்பவே
(சூளா. 14 - 3)

2. பண்ணமை மகர நல்யாழ் (சூளா. 100. 1)

3. பாண்படை தொடர்ந்து பாட - (சூளா. 163 . 2)

## 1. யசோதர காவியம்

1. நன்றினி தெளிந்தா யல்லை
நவிலிசை அமுத நல்யாழ்
ஒன்றிய செவிடும் மூடும்
ஒருவனால் பெறுதல் உண்டோ - (யசோ. 246 .2)

## 2. கலிங்கத்துப் பரணி

*வீணை யாழ் குழல் தண்ணுமை வல்லவர்*
*வேறு வேறிவை நூறுவி தம்படக்*
*காணலாம் வகை கண்டனம் நீயினிக்*
*காண்டல் வேண்டும் எனக் கழல் போற்றவே*
*(க. பரணி. 323)*

# 11. பெருங்கதையில் நரம்புக் கருவிகள்

1. உதயணனின் கோடபதி என்னும் யாழைக் குறிப்பிடும் போது

   1. தெய்வப் பேரியாழ் 1 - 48 - 104
   2. நல்யாழ் IV. 3. 139
   3. வீறமை வீணை - IV. 3. 129
   4. வனப்பமை வீணை . IV. 4 . 6 என்கிறார்

2. வாசவதத்தையின் யாழை

   1. செம்பொன் நல்யாழ் - 1 - 37 - 160
   2. தகையொலி வீணை - 1. 38. 178 என்கிறார்

3. பதுமாபதியின் யாழை

   'மான புணர்ந்ததோர் மகர வீணை
   தரிசகன் தங்கைக் குரித்தென அருளிய
   கோல நல்லியாழ் கொணர்ந்தனள் கொடுப்ப'
   (111 - 15 - 23)

4. உதயணன் சிறப்பினை

   1. வீணை வித்தகன் . 111. 21. 34
   2. நல்லி யாழ் வித்தகன். 111. 21. 102
   3. வீணை வேந்தன் . IV. 2 . 79
   4. யாழின் கிழவன் . V. 4. 104 என்கிறார்

5. இசைக் கருவியின் சிறப்பு

   1. பண்ணமை நல்லியாழ் - 1. 34. 228

2. பெறற்கரும் பேரியாழ் - 1. 36. 44
3. சீர்கெழு வீணை - 1. 34. 81
4. மணியொலி வீணை - 1. 35. 101
5. தெய்வ நல்யாழ் - 1. 37 . 113
6. பலி கெழு நல் யாழ் - 1. 37. 107

6. வீணை நவின்ற விறல் வேல் உதயணன் - 111 . 18 . 58

7. யாழும் குழலும் அரிச்சிறு பறையும்
தாழ முழவமும் தண்ணுமைக் கருவியும் . 1. 38. 174

8. நங்கை கற்கு மங்கலக் கருவி - 1. 34. 171
பைந்தொடி பயிற்றும் பண்யாழ் - 111 . 14. 192

9. யாழும் பாட்டும் யாவரும் அறிவர் - 111. 15. 48

10. குழலும் யாழும் மழலை முழவமும்
முட்டின் றியம்பும் பட்டினம் - 1. 40. 86

11. தெய்வ நல்யாழ் கையமைத்தியற்றிய - 111. 7. 56

12. அணியிழை மகளிரும் யானையும் வணங்கும்
மணியொலி வீணையும் சாபமும் மரீஇ - 1. 35. 100

13. நூலமை வீணை கோலமை கொளீஇக் - 11 . 19. 200

14. எட்டி குமர னினிதி னியக்கும்
இன்னொலி வீணைப் பண்ணொலி வெரீஇ - 1. 40. 116

15. மிடறும் நரம்பும் இடை தெரிவின்றிப்
பறவை நிழலிற் பிறர் பழித் தீயா - 111 . 14. 275

16. ஐவகைக் கதியும் அற்ற மின்றித்
தெய்வ நல்யாழ் திருந்திழை தைவர் - 1. 37. 112

17. தைவரற் கியைந்த தண்பயில் வீணையைக்
கையினும் செவியினும் செவ்விதில் போற்றி - 1. 36. 365

18. இசைகொள் சீறியா ழின்னிசை கேட்ட - 1. 47 . 241

# 12. சீவக சிந்தாமணியில் நரம்புக் கருவிகள்

சீவகன் அறுபத்து நான்கு கலைகளிலும் வல்லவன் என்பதை 'ஐயனுக்கு அமைந்த நீரார் அறுபத்து நால்வர்' என்கிறது.

## 1. சீவகன் யாழின் நலம் ஆராய்தல்

சீவகனுக்கு யாழைத் தருமாறு தோழியிடம் காந்தருவதத்தை கூறச் சீவகன் யாழின் நரம்பைத் தெறித்துத் தத்தையினுடைய யாழின் குறைகளைத் தோழியிடம் எடுத்துக் கூறினான்.

நீர் நின்று இளகிற்றியது வேண்டா
நீரின் வந்தது இது போக
வார் நின்றிளகு முலையினாய்
வாட்டின் வைற்ற திது நடக்க
ஒரும் உருமேறு இது உண்டது ஒழிக
ஒண் பொன்னுகு கொடியே
சீர் கால் அணிகை சிறுவன் போல்
சிறப்பின் நம்ம இது என்றான் - 718

## 2. சீவகன் யாழிசைத் திறன்

குரல் குரலாகப் பண்ணிக்
கோதை தாழ் குஞ்சி யானதன்
விரல் கவர்ந் தெடுத்த கீதம்
மிடறெனத் தெறிதல் தோற்றார்

## 3. யாழின் அமைப்பு

பணி வரும் பைம் பொற்பத்தர் பல்வினைப் பவள அணி
மணி கடை மருப்பின் வானார் மாடக வயிரத் தீந்தேன்
அணி பெற ஒழுகி என்ன அமிழ் துறழ் நரம்பின் நல்யாழ்
கனிபுகழ் காளை கொண்டு கடலகம் வளைக்கப் பெற்றான்
- 722

## 4. யாழும் பாட்டும்

பருந்தும் நிழலும் போற் பாட்டும் எழாலும்
திருந்து தார்ச் சீவகற்கே சேர்ந்த வென் றெண்ணி
விருந்தாக யாழ்பண்ணி வீணை தான் தோற்பான்
இருந்தாய் இளமயில் போல் ஏந்திழை போல் கண்ணான்

- 730

5. தீந்தொடை மகரவீணை - 608

6. தேனுயர் மகரவீணைத் தீஞ்சுவை - 664

7. திருமணி வீணை - 619

8. தீந்தொடை நரம்பின் தீமை சிறிதிலாப் பொழுதும் ஓதி- 72

9. பரவை யாழ் குரல் பண்ணமை - 530

10. கோட்டு வீணை சுகிர் நரம்பு - 728

11. நரம்பொடு வீணை நாவின் - 658

12. இன்னிய முழங்கி யார்ப்ப - 834

13. முழவும் யாழும் இரங்கும் - 2896

14. மணியொலி வீணை பண்ணி - 1746

15. யாழ் மழலைம்மொழி மாதரான் - 1316

16. செவ்வழி யாழி னூறத் தீஞ்சொலான் - 1407

17. கேள்வி நல்யாழ்க் கிளை நரம்பு - 1386

18. தொடை யாழ் மழலை மொழி - 1526

19. நல் யாழினியினு மினிய சொல்லால் - 1537

20. தேனார்த் தெனத் தீண்டி நல்லான் வீணை - 717

21. பசும்பொன் யாழ் மூ நரம்பு - 717

22. மணிவீணை - 1473

23. மாமணியாழ் - 736

24. பேரிசை வீணையிற் சூட்டி - 1466

25. வீணைக்கு அகிற்புகை இடுவர் - 719

26. துகிலுறையும் நல்யாழ் - 719

27. வீணை யொன்றினை - 716

28. தோழனுந்தேவி.....யாழெழீஇப் பாடக் கேட்டோர்- 1155

29. தேரிவ ரூர்ந்தனர்...... பேரிசை வீணையிற் சூட்டி - 1466

## 13. கல்லாடத்தில் - நரம்புக் கருவிகள்

1. நாரதப் பேரியாழ் - 82 - 2 - 8
2. தும்புரு யாழ் - 82 - 12 - 17
3. கீசகப் பேரியாழ் - 82 - 19 - 21
   தந்திரி நூறு தழங்கியமுகத்த
4. மருத்துவ யாழ் - 82 - 22 - 29

## 17. திருவாசகத்தில் நரம்புக் கருவிகள்

1. இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க - அண்டப்பகுதி - 35
2. இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால் - திருப்பள்ளி எழுச்சி - 4
3. வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம் - திருப்படையாட்சி - 6. 4

## 18. திருவிசைப்பாவில் - நரம்புக்கருவிகள்

1. கின்னரம் முழவம் மழலை யாழ் வீணை - 9. 10. 8
2. சாதிக் கின்னரம் கலந்து ஒலிப்ப - 9. 17. 2
3. துந்துபி குழல் யாழ் மொந்தை - 9. 8. 4
4. நரம்பாலும் உயிர் ஈய்ந்தாய் - 9. 12. 8

5. மருத யாழ் - 9.17.10

6. கெழுமு யாழொலி சிலம்பும் - 9.16.4

7. தந்திரி வீணை கீதமும்பாட - 9.17.2

8. மழலை யாழ் சிலம்ப - 9.17.7

9. மழலை யாழ் வீணை - 9.10.8

10. யாழொலி விம்முமிகு - 9.29.11

11. குழலொலி யாழொலி கூத்தொலி - பல்லாண்டு . 11

## V. காரைக்கால் அம்மையார் பாடல்களில் நரம்புக் கருவிகள்

1. தருணிதம் துந்துபி தாளம் வீணை - 11.1.9

2. பாடியிருந்தந் தரி யாழமைப்ப - 11.1.11

## 19. திருவிளையாடல் புராணத்தில் - நரம்புக் கருவிகள்

1. மாடகஞ் செறியும் யாழ்வழி பாடி
வாது வென்ற வர லாறும் இசைப்பாம் -(இசைவாது.1.4)

2. பந்த யாழ் முதுகு தைவர விட்டுப்
பாடல் ஆயமிரு பக்கமும் மொய்ப்ப - இசைவாது. 5.1

3. முந்தி யாழிடம் தழீஇக் குரல் வழி முகிழ் விரல்போய்
(இசைவாது . 15)

4. வீணை வாங்கினன் மாடகம் முறுக்கிளை விசித்து
வாணரம்பெறிந் திருசெவி மடுத்தனர் -(இசைவாது. 16)

5. ஏழிசை மழலை வீணை இடந்தழீஇச் சுருதி கூட்டி
வாழியின் இசைத்தேன் - (விறகு விற்ற. 3 - 3)

6. பழையதோர் பொல்லம் பொத்திய பத்தர் வாழ்
கோறோன் - (விறகு விற்ற. 13 - 1)

7. பருந்தொடு நிழல் போக்கென்ன
யாணரம்பிசையின் செல்ல விசைந்த இன்னிசை
(விறகு விற்ற. 36 - 1)

## 20. குமரகுருபரர் காட்டும் நரம்புக் கருவிகள்

1. மகர யாழ் - (மீனாட்சியம்மை பி. தமிழ் 7 - 10)

2. தென் விளி யெடுக்கும் சீறியாழ்ப்பாண -
(காசிக்கலம்பகம் 58 - 4)

3. சீறியாழ் - (மதுரைக் கலம்பகம் - 47)

4. விபஞ்சி பயிறரு மதங்கர் - முத்துக்குமாரசாமி பி. தமிழ்.4
(விபஞ்சி - வீணை)

5. தாடகத் தியன்ற சூடகக் கரத்தால்
மாடகத் திவவி யாழ் மரும மீ தணைத்து
மூவகை நிலயத் தேழு சுர நிறீஇக்
(பண்டார மும்மணிக் கோவை 17 - 12)

# துணை நூல்கள்

1. அகநானூறு - பதிப்பு : இரா. இராகவையங்கார் - 1873.
2. இசையும் யாழும் - அ. இராகவன் - கலை நூற் பதிப்பகம் திருநெல்வேலி-2, 1971.
3. கல்லாடம் - கல்லாடனார் - காஞ்சி இராமாநாத யோகிகள் பதிப்பு, 1911.
4. கலித்தொகை - நச்சினார்க்கினியார் உரை.
5. சிலப்பதிகாரம் - உ வே. சாமிநாதையர், பதிப்பு, 1947.
6. சீவக சிந்தாமணி - உ வே. சா. பதிப்பு, 1907.
7. திருவாசகம் - கழகவெளியீடு, 1925.
8. திருக்குறள் - கழகவெளியீடு, 1948.
9. தேவாரம் - அப்பர் - கழகவெளியீடு, 1927.
10. தேவாரம் - திருஞானசம்பந்தர் - தருபுர ஆதீனம், 1954.
11. தேவாரம் - சுந்தரர் - தருமபுர ஆதீனம், 1954.
12. தொல்காப்பியம் - கழக வெளியீடு, 1953.
13. நற்றிணை - பி. நாராயணசாமி ஐயர், 1902.
14. பரிபாடல் - உ வே. சா. பதிப்பு, 1947.
15. பாணர் கைவழி - டாக்டர். வரகுணபாண்டியன், 1950.
16. புறநானூறு - ஔவை துரைசாமி பிள்ளை, 1951.
17. பெருங்கதை - உ வே. சா. பதிப்பு, 1922.
18. பெரிய புராணம் - ஆறுமுக நாவலர், 1945.
19. பத்துப்பாட்டு - நியூ செஞ்சுரி புக் உறவுஸ் (பி) லிட் சென்னை- 98, 2004.
20. மணிமேகலை - ந .மு. வேங்கடசாமி நாட்டார் பதிப்பு.
21. மலைபடுகடாம் - கழக வெளியீடு, 1860.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| படைப்பு நெறிமுறைகள் | 150.00 |
| Comparative Studies in Literary Cultures | 100.00 |
| Sangam Classics : New Perspectives | 105.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| அரங்கியல் நோக்கில் கபிலர் பாடல்களில் காணலாகும் கதைமாந்தர்கள் | 100.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| தமிழ் வாழ்க்கை வரலாற்றியலக்கியம் | 170.00 |
| கவிஞர் குலோத்துங்கனின் மானுடயாத்திரை காவிய வானில் புதிய தாரகை | 45.00 |
| தமிழ் நாடக வகையும் வரலாறும் | 110.00 |
| வா.செ.கு.என்ற ஆளுமையாளர் | 50.00 |
| உ.வே.சா.வின் குறுந்தொகை உரைத்திறன் | 45.00 |
| மருதத்தில் மக்கள் வாழ்வியல் | 40.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 1 பாயிரம் - 1 | 85.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 4 எழுத்தியல் - 2 | 140.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 2 பாயிரம் - 2 | 75.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 6 உயிரீற்றுப்புணரியல் - 1 | 125.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 7 உயிரீற்றுப்புணரியல் - 2 | 160.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 8 மெய்யீற்றுப்புணரியல் | 160.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 9 உருப்புணரியல் | 95.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 12 வினையியல் | 190.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 13 பொதுவியல் - 1 | 140.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 16 இடைச்சொல்லியல் | 90.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 17 உரிச்சொல்லியல் | 55.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 18 தொல். நன்னூல் | 120.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் (ம.ப.) | 65.00 |
| வெல்லம் புராணம் | 200.00 |
| இதழியல் உலகம் | 120.00 |
| தமிழும் தமிழ்க் கற்பித்தலும் | 60.00 |
| படைப்பிலக்கியம் - விளம்புநிலை மக்கள் ஆய்வுநோக்கு | 100.00 |
| பழந்தமிழும் கிளைமொழிகளும் | 65.00 |
| உலக மொழிகளில் தமிழ்ச்சொற்களும் இலக்கணச்கூறுகளும் | 85.00 |
| அரசகுலச் சான்றோர் வரலாறும் மதுரைக்காஞ்சியும் | 115.00 |
| பெயரியல் | 55.00 |
| தமிழ் இகலாம் உருவாக்கமும் திருக்குர் ஆன் தமிழ் வாசிப்பும் ஆய்வியல் சிந்தனை | 45.00 |
| தலித் அறம் | 45.00 |
| பொதுவுடைமை இயக்க இதழ்கள் | 115.00 |
| தமிழில் இதழியல் | 270.00 |
| மொழிஞாயிறு தேவநேப் பாவாணரின் பன்முக ஆளுமை | 50.00 |

.................................................................................................

| | |
|---|---|
| 737 நரம்புக் கருவிகள் | 70.00 |